# விநோதினி



*ஒரு சம்பவம்.*
*இடம்- சென்னை, தமிழகம்.*
*காலம்- சில வருடங்கள் முன்னால்.*

**போ**ஸ்ட்மேன் ரங்கசாமிக்கு வயது ஐம்பது. வெற்றிலை வாய். முகத்தில் இன்னும் எட்டு ஆண்டு உழைக்க வேண்டுமே என்கிற சோர்வு கலந்த அலுப்பு. அவரை அனுதாபத்துடன் அனுசரித்து ஓடுவது அவருடைய சைக்கிள் மட்டுமே.

ரங்கசாமி சைக்கிளை மெதுவாகத்தான் மிதித்தார். எதிர்க்காற்றில் சைக்கிள் திணறியது. ரங்கசாமிக்கு மார்பை அடைத்தது. சற்று நிறுத்தினார். கேரியரில் தொங்கிய பிரவுன் நிற தபால் பையைப் பார்த்தார். பெருமூச்சு விட்டார். மறுபடி சைக்கிளை இயக்கினார்.

செம்மண் பாதை. புதிதாகப் பிறந்த நகர். ரங்கசாமி ஒரு திருப்பத்தில்

திரும்ப; எதிர்பாராமல் ஒரு லாரி முகத்தில் மோதுவது போல்... பஹா!

நல்லகாலம்! சில அங்குல இடைவெளியில் மரணமோ படுகாயமோ விலகிவிட்டது. ஆனால் சைக்கிள் மீதே விழுந்து தபால் கவர்கள் சிதறிக் காற்றில் பறந்து.. லாரிக்காரன் ஏனோ சிரித்ததை முங்கசாமி கவனிக்கவில்லை. 'பெருமாளே!' என்று முனகிக்கொண்டு மறுபடி பயணத்தை மேற்கொண்டார்.

தெருவோரச் செடி மறைவில் ஒரே ஒரு 'வான் கடிதம்' தவறிப்போய் மறைந்து கொண்டதை அவர் கவனிக்கவில்லை. அது ஒரு முக்கியமான கடிதம். ஏர்-மெயில்.

அனுப்புவோர் விலாசத்தில் இருந்த முகவரி:
விஜயகுமாரி
நிலவேலி,
இலங்கை.

ஆனந்த் தன் குழந்தையைப் பார்த்தான்.

உலகின் மிகச்சிறிய ஆச்சர்யம்! சில வெண்துளிகளும் அதன் 'தோழிகளும்' உருவாக்கிய மகா அற்புதம்! இது பரம்பரைச் சங்கிலியின் புதிய வளையமா? கடோபநிஷத்தில் நசிகேதனிடம் யமன் என்ன சொன்னான்? "நசிகேதா! எந்த வரமும் கேள், தருகிறேன்! தேர்கள், மலர்கள், இசை, அழகிகள் எல்லாம்... எல்லையில்லா இன்பத்தை அனுபவி! ஆனால் நசிகேதா, பிறப்பைப்பற்றியும், மரணத்தைப் பற்றியும் மட்டும் கேட்காதே!"

பெண் குழந்தை! தந்தை வழி சமூகத்தின் நவீன சட்டதிட்டங்களில் சிக்கப்போகும், 'சொர்க்கத்தில் தீர்மானித்த ராஜகுமாரனை' உபாசிக்கப்போகும் பெண் குழந்தை!

ஹா! இதுதான் உலகத்தின் புதிய நம்பிக்கை, முற்றிலுமாக ஓர் இள்ம் கவிதை.

கவிதை கால்களை அசைத்தது. ஆனந்த் அதன் நெற்றியை முத்தமிட்டு, வலிக்குமோ என்று பயந்தான். அதனுடைய சிறிய மார்பு ஏறி இறங்குவதில் உயிர் வளர்வதைக் க்வனித்தான். இந்தப் பொம்மை அவனுடைய வித்து!

அவன் மனதில் இப்போது தோன்றும் விவரிக்க முடியாத இன்ப உணர்ச்சிகளைப் பாசம் என்று பெயரிடலாமா?

ஆனந்த்! எல்லாவற்றையும் நீ மறந்துவிட்டாய்!

குடும்பம் உன்னைப் பற்றிக் கொண்டது.

மனைவி, குழந்தை, குடும்பம்....

ஆனந்த்! உண்மையைச் சொல்!

எல்லாம் மறந்துவிட்டதா?

அந்த முகம் ஞாபகத்திலிருந்து அழிந்துவிட்டதா?

தூசி படிந்த, அலைபாயும் கூந்தலுடன், ரத்தினக் கண்களுடன், அலட்சிய முகபாவத்தில், முரட்டு உடை அணிந்த அவள்.... அவள்... ஆனந்த்! சே! நீ இவ்வளவுதானா?

அதற்குள்ளா, அவளை மறந்துவிட்டாய்?

ஆனந்த் பெருமூச்சுவிட்டான்.

அவன் வாழ்க்கை இயல்பான சராசரி சமூக வாழ்வில் கலந்துவிட்டது. அதற்கு முன்னால் என்னென்ன அனுபவங்கள்! பரபரப்பும், கோபமும், தவிப்பும், ஏமாற்றமும் எல்லாம் கலந்த கடந்த சில ஆண்டுகளில் வாழ்ந்த அந்த துடிப்புமிக்க ஆனந்த் எங்கே?

இப்போது ஆனந்த் அமைதியாகிவிட்டான். வாழ்வின் மிகப் பெரும் அதிர்ச்சி தந்த அமைதி. புதிய மனைவி ரஞ்சனியின் அருகாமையும், இனிமையான புன்சிரிப்பும்

இதோ, இந்தப் புதிய சிசுவின் பிர வேசம் தந்த சிலிர்ப்பான அமைதி.

தனிமையான நேரங்களில் அவள் ஞாபகம் ஆனந்திற்கு வரும். புழுதி கிளப்பிய ஜீப்பிலிருந்து குதித்து இறங்கி, கம்பீரமாக அவள் நடந்து வந்த காட்சி நினைவிற்கு வரும்.

"ஆனந்த், இங்கை எதுக்கு வந்தீங்க?"

ஆனந்த் ஜன்னலின் கம்பியைப் பிடித்தபடி வெளியே பார்த்தான். கண்களில் கண்ணீர் மின்னியது. சே! ஞாபகங்களைக் கொடூரமாக அழித்து, புதிய பெண்ணை அந்த இடத்தில் ஏற்றிவைத்து வாரிசைப் பெற்றெடுத்து...

ஞாபகங்களை அழித்தா?

இல்லை, இல்லவே இல்லை. அந்த ஞாபகங்களுக்கு அழிவே இல்லை. நான் என்ன அவளுக்குத் துரோகமா செய்தேன்? என்மேல் என்ன தவறு? அவளுக்காக எத்தனை பாடுபட்டேன்?

அவள்தானே?.... அவள்தானே? ஆனந்தின் பிடி இறுகியது.

ரஞ்சனி அவன் தோளைத் தொட்டாள்.

"என்ன யோசனை?"

## எந்தப் படம் யார் வரைந்தது?



2


3

5


4




6

நடிக, நடிகையர் சிலரைச் சந்தித்து, கண்ணாடியில் பார்த்துக்கொண்டு உங்கள் முகத்தை நீங்களே வரையுங்கள் என்று சொன்னோம். அவர்கள் வரைந்த படங்கள் இதோ உள்ளன. எந்தப் படம் யார் வரைந்தது? கண்டுபிடிக்க முடியாவிட்டால்

53-ம் பக்கம் பார்க்க.

"ஒன்னுமில்லை"

"தூக்கம் வரலையா?"

"இல்லை ரஞ்சனி... என்னவோ யோசனை!"

குழந்தை அழுதது. ரஞ்சனி குழந்தையை எடுத்தாள். முத்தமிட்டாள். அவள் கண்களில் மின்னுவது பெருமையா?

"அழாதேம்மா...கண்ணு..... வித்யாக் குட்டி...அழாதேடி! பாருங்க... உங்களையே பாக்கறது...."

ஆனந்த் குழந்தையைப் பார்த்தான்.

"ரஞ்சனி! என்ன பேர் சொன்னெ? வித்யாவா?"

"ஆமாம்...வித்யா குட்டி! என் செல்லம்!"

"இல்லை. ரஞ்சனி, அந்தப் பேர் வேண்டாம்!"

"பின்னெ?"

காலிங்பெல் அடித்தது.

ஆனந்த் கதவைத் திறந்தான். கிருஷ்ணன் நின்றிருந்தான்.

"ஹாய்! உள்ளே வா!" என்றான் ஆனந்த்.

"நான் வந்தது இருக்கட்டும். நீ ஏன் வரலை?"

"எங்கே?" என்றான் ஆனந்த்.

"எங்கேயா?... சரிதான்! விஎம் ப்ரஸ் மீட்! உனக்காக எவ்வளவு நேரம் வெய்ட் பண்றது?... குழந்தையோட கொஞ்சலா?.... ஹலோ' சிஸ்டர்... சீக்கிரம் ஒரு காபி போடுங்க!" என்று அமர்ந்தான்.

ரஞ்சனி சிரித்தபடி உள்ளே சென்றாள்.

"நீ போய்ட்டு வாடா! நான் வரலை... ஐ யாம் நாட் இன் மூட்...." என்றான் ஆனந்த்.

கிருஷ்ணன் குரலைத் தாழ்த்தி, "விநோதினி?" என்று கேட்டான்.

ஆனந்த் பதில் சொல்லவில்லை.

"த பார்! எல்லாம் முடிஞ்சு போச்சு! விநோதினி போயாச்சு!... நீ என்னடான்னா, உறுமீன் வரும்வரை வாடும் கொக்கு போல்...

"கிருஷ்ணா! யு ஆர் க்ரூயல்! உனக்குப் புரியாது!"

"பேசாதே!... கொஞ்ச நாள் முன்னாடி நீ பட்ட பாடும், அலைஞ்ச அலைச்சலும் முப்பிறவிக்கும், போதும்... எல்லாத்தையும் மற! ஹலோ சிஸ்டர்! காபி வந்திருச்சா? குட்!" என்று காபியை வாங்கிக் கொண்டான்.

"என்ன கிருஷ்ணன் ஸார், இந்த நேரத்தில் ரிபோர்டிங்கா? இவரு ஒண்ணும் சொல்லலியே..." என்றாள் ரஞ்சனி.

"முனிவர் மறந்திருப்பார்!... டேய், கிளம்பு! இன்னும் அரை மணிதான் இருக்குது..." என்று சிரித்தான்.

"நான் வரலைன்னு சொன்னேன்!"

"நாலடியில சொல்லியிருக்கு. ஆனந்த் இல்லாமப் போகாதேன்னு. உனக்குப் பிடிச்ச விஷயம்டா! இலங்கைப் பிரச்சினை!" என்றான் கிருஷ்ணன்.

ஆனந்த் சட்டென்று நிமிர்ந்தான்.

"ரிபல் க்ருப்ஸ் பேச்சு வார்த்தைக்கு அப்புறம் சி.எம்.மோட முதல் ப்ரஸ் மீட்... நிறைய அவல் கிடைக்கும்... கிளம்பலாம் வா!" என்று ஆனந்தை இழுத்துச் சென்றான்.

ஆனந்த் வீடு திரும்பும்போது மணி பதினொன்று. ரஞ்சனி காத்திருந்தாள்.

"ரஞ்சனி, தூங்கலியா?"

"நீங்க இல்லாமலா?"

குளிர் இரவில் ரஞ்சனியின் அருகாமை இதமாக இருந்தது. அவனுடைய தேவையில்லாத குற்ற உணர்ச்சியை ரஞ்சனிதான் குறைக்கப் போகிறாள் என்று அவனுக்குத் தோன்றியது.

"என்னங்க!... குழந்தைக்கு என்ன பேர் வைக்கலாம்? வித்யா, நல்லால்லியா?" என்றாள் முந்தின பேர் வைப்புப் பேச்சை ஞாபகத்தில் வைத்து ரஞ்சனி.

"வேணாம், வேற பேர்...."

"சரி, நித்யா?"

"வித்யா! நித்யா!... சே! சே!..."

"சுமதி நல்லாயிருக்கு..... என் க்ளாஸ் மேட்..."

"விநோதினி!" என்றான் ஆனந்த்.

"விநோதினியா?.... விநோதமா இருக்கு... ஹேர் ஆயில் கம்பெனிபேர் மாதிரி .... சினிமா நடிகை மாதிரி!.."

"ரஞ்சனி, ஷட்டப்!" என்றான் ஆனந்த். அவள் இடுப்பிலிருந்த கையை உடனே எடுத்துவிட்டான்.

"என்ன... என்ன ஆச்சு?" அவளுக்கு அவன் கோபம் புரியவில்லை.

ரஞ்சனி அவன் கன்னத்தைத் தொட்டுத் திருப்பினாள். இரவு விளக்கின் நீலத்தில் அவள் முகம் தாமரை போல் இருந்தது. கண்களால் அவனை வருடுருவி, "விநோதினி யாரு?" என்றாள்.

"நான்சென்ஸ்!... அந்தப் பேர் எனக்குப் பிடிச்சிருக்கு, அவ்வளவுதான்!" என்றான் ஆனந்த்.

"விநோதினி! இதுல பிடிக்கறதுக்கு என்ன இருக்கு? வேணாங்க. புராதனமா இருக்கு... மதுமிதா, நல்லா இல்லை?"

"இல்லை ரஞ்சனி! தீர்மானிச்சிட்டேன்!... விநோதினிதான்..."

"காரணம் சொல்ல மாட்டீங்க..."




"கல்யாண வயசில் பெண்ணை வீட்டில் வெச்சுகிட்டு இப்படி சீட்டாட றீங்களே இது உங்களுக்கே நல்லா இருக்கா?"

"பின்னே, சீட்டாடற இடத்துக்கு அவளையுமா கூட்டிட்டுப் போக முடியும்."

–கீழை.அ.கதிர்வேல்

"புல்ஷிட்! காரணம் ஒண்ணுமில்லை.."

"மறைக்கறீங்க."

"அடடா!..."

"சொல்லுங்க.... என்னால புரிஞ்சுக்க முடியும்... பழைய காதலியா?" ரஞ்சனி நேராகக் கேட்டாள்.

ஆனந்த் எல்லாவற்றையும் சொல்லிவிடலாமா என்று விரும்பி, உடனே மாற்றிக்கொண்டான். கிருஷ்ணனின் அறிவுரை! 'முட்டாள்தனமா எல்லாத்தையும் சிஸ்டர் கிட்டே சொல்லிடாதே! அனாவசியப் பிரச்னை வரும். ஜெலஸி – தை நேம் இஸ் வுமன்....'

"ஒண்ணுமில்லை ரஞ்சனி. தூக்கம் வருது. குட் நைட்!" என்று திரும்பிப் படுத்துக்கொண்டான்.

ரஞ்சனி மௌனமாக அவன் முதுகையே பார்த்தாள்.

'விநோதினி' என்று தனக்குள் சொல்லிக்கொண்டாள்.

–தொடரும்

ரஞ்சனி அந்தக் கேள்வியை நிறைய முறை கேட்டுவிட்டாள். "என்னங்க, விநோதினின்னு முடிவே பண்ணிட்டீங்களா?"

ஆனந்த் ஒரே பதிலைத்தான் சொன்னான். "ஆமாம்."

ரஞ்சனி மௌனமாகவே தன் கோபத்தைக் காண்பித்தாள். திருமணம் ஆன முதல் இரவிலேயே ஆனந்திடம் என்னவோ தப்பு என்று அவளுக்குத் தெரிந்திருந்தது. அவன் உற்சாகமாகவே இல்லை. ரஞ்சனியிடம் எந்தக் குறும்பும் செய்யவே இல்லை.

நமஸ்கரித்து, வெட்கப்பட்டு எழுந்து, தலைகுனிந்து 'என்னைப் பிடிச்சிருக்கா?'... ம்ஹூம்... எதுவுமே இல்லை. ஆனந்த் அப்போது சிகரெட் அல்லவா பிடித்துக்கொண்டிருந்தான். வானம் பார்த்த தேவதாஸ் போல்... ரஞ்சனி அவனை



# 2

# விநோதினி

இயல்பிற்குக் கொண்டுவர என்ன கஷ்டப்பட்டாள்? காரணம், 'கல்லானாலும் கணவன்' ஃபார்முலா இல்லை.

அவளைக் கவர்ந்த ஆனந்தின் ப்ரில்லியன்ஸ்.

அவன் ஆங்கில, தமிழ் தினசரிகளில் எழுதும் கட்டுரைகள்... அவனுடைய பேட்டிகள்... எப்போதாவது வெளியாகும் அவனுடைய தமிழ்க் கவிதைகள்... அவனுடைய புதிரான கவிதை நோட்டு... (அதில் காதல் கவிதை ஒன்றுகூட இல்லை)... அவனுடைய தெளிவான முகம்...

ஆனந்தின் 'ச்சரிஸ்மா' அவளை ஈர்த்தது. அவ்வளவே.

ஆனால் ஆனந்தின் மனதில் ஏதோ புதைந்துகிடப்பதையும், அதை அவளிடம் அவன் சொல்ல மறுப்பதும் அவளைப் படுத்தியது.

அவள் மனதை அவன் இன்னும் நெருங்கவே இல்லையா?

வெறும் உடல் அளவில் மட்டும் தானா?

கிருஷ்ணா டாவின்ஸி



அந்த நிமிடங்களில் அவன் தரும் முத்தங்களில் ஆத்மார்த்தமான நேசம் கிடையாது என்றால்...?

ரஞ்சனிக்கு அழுவது பிடிக்காது என்பதால் அழவில்லை. ஆனால் மனதை என்னவோ செய்தது.

ஆனந்த் எதுவுமே பேசாமல் சாப்பிட்டான், டி.வி. நியூஸ் பார்த்தபடி. "சரி ரஞ்சனி, கிளம்பட்டுமா? ஓ கே... யு ஆர் ஆங்ரி..." என்று குழந்தையை சம்பிரதாயமாக முத்தமிட்டு, வண்டியில் கிளம்பி, டாட்டா சொல்லாமல் மறைந்து போனான்.

அவன் போன அடுத்த நொடி கண்களில் கண்ணீர் திரண்டது ரஞ்சனிக்கே விருப்பமாக இல்லை. சே! நான் ஏன் அழ வேண்டும்? என் மனதில் சிறு வயதிலிருந்து புகட்டப்பட்ட பாடங்களின் பாதிப்பு! கணவனுக்காக அழுவது சம்பிரதாயமா?

குழந்தை அழுதது. ரஞ்சனி எடுத்தாள். என் குழந்தை... என் வயிற்றில் உருவாகி, என் உதிரத்தைக் குடித்து, என்னுள் பிரளயத்தை உருவாக்கி, என்னிலிருந்து பிரிந்து, ஆனாலும் என்னுடன் பிணைந்திருக்கும் என் உயிரின் ஓர் அங்கம்... விநோதினி!

யார் அந்த விநோதினி? என்

குழந்தைக்கு அவள் பெயரா!

குழந்தையின் ரப்பர் ஷீட்டை மாற்றினாள். சுத்தம் செய்தாள். எல்லாம் அவள்தான் செய்ய வேண்டும். ஆனந்தும் அவளும் ஏதோ விதங்களில் நவீன அநாதைகள் தான். ரஞ்சனிக்கு அப்பா அம்மா கிடையாது. பி.எச்.இ.எல்.லில் வேலை செய்யும் 'கடமை'யைச் செய்த அண்ணன் மட்டுமே. குழந்தையைப் பார்க்க விரைந்து வந்து இன்ஸ்பெக்ஷன் போல் சென்றுவிட்டவன். ஆனந்திற்கு அம்மா இல்லை. அப்பா கொஞ்ச நாள் முன்புதான் 'இல்லாமையுடன் இருத்தலின் தொடர்பைக் கண்டுபிடிக்க' பிரும்மத்தைத் தேடி வடநாட்டிற்குப் போனார். எங்கே இருக்கிறாரோ?

ரஞ்சனியின் மனதில் இப்போது தோன்றிய கழிவிரக்கத்தை அவளே விரும்பினாள் போலும். தனிமையும், உதவியின்மையும் அவளுடைய இதயத்தின் இளகிய பாகத்தை ஆக்கிரமிக்க... ரஞ்சனி ஏனோ அழுதாள். அவள் அழுதது அவளுடைய சின்னக் குழந்தைக்குப் புரியவேயில்லை... சிரிக்கிறதா என்ன?

என் சின்னப் பாப்பாவே, உனக்குத் தெரியுமா?

யார் அந்த விநோதினி?




"என்னப்பா ஆனந்த்! மிலிட்டன்ட்ஸை சப்போர்ட் பண்ணி எழுதியிருக்கியே?" என்றார் சிவராமன்.

"தெரியாதா ஸார்? ஆனந்த் ஒரு ஈழம் சிம்பதைஸர் ஸார்..." என்றான் கிருஷ்ணன்.

"சே! சே!... அப்படியெல்லாம் இல்லை!" என்றான் ஆனந்த். "நல்லாப் படிச்சுப் பாருங்க!"

"எதை? இதோ இந்த வரியைப் பாரு... 'போராளிகள் இல்லாத அரசியல் எதிர்காலம் சாத்தியமில்லாதது. ஈழ மக்களைத் துப்பாக்கிகளிலிருந்து இனிப் பிரிக்க முடியுமென்று தோன்றவில்லை.' ஆனந்து!... பெரியவர் இதை அனுமதிக்க மாட்டார்! எடுத்துரு" என்றார் சிவராமன்.

"முடியாது ஸார்! ஒரு வரி எடுக்கக் கூடாது... வேணும்னா முழுசா எடுத்துருங்க... கிச்சா வேற ஒண்ணு வைச்சிருக்கான். 'ஓடிப்போன பெண்கள்' பத்தி ஒரு சர்வே. போட்டுருங்க!" என்றான் ஆனந்த் கோபமாக.

"பிரின்ஸிபிள் இருக்குதுப்பா! பொலிடிக்கல் பிரின்ஸிபிள்!" என்று சிவராமன் குரலைத் தாழ்த்தி, "அதாவது நம்ம பெரியவருக்கு..." என்றார்.

"என்ன ஸார்? ஜனநாயகமே கிடையாதா? குடுங்க... வேற பத்திரிகையா இல்லை? இதையெல்லாம் வெளியிட உங்களுக்கெல்லாம் தாராள மனசு கிடையாது..."

"கிருஷ்ணா! நீ வேற குட்டையைக் குழப்பாதே!"

"சும்மாயிருங்க ஸார்! ஆனந்துக்கு சின்னவர் சப்போர்ட் இருக்குது. ரெண்டு பேரும் ஒரே தட்டுல காராபூந்தி சாப்பிடறாங்க..."

"சின்னவருக்கு என்ன 'வீட்டோ' பவர் இருக்குதா? போர்டு டைரக்டர்ஸ் ஷேர்ல சின்னவர்து எவ்வளவு தெரியுமா? மைனாரிட்டி!" என்று சிரித்தார் சிவராமன்.

"எதுக்கு சார் அனாவசியப் பேச்சு? வேணாம்னாக் குடுத்துருங்க..."

"அட இருப்பா... நல்லா இருக்

குதே. இஞ்சி முரப்பா கடிச்சாப்பல ஜிவ்வுன்னு... சிலோன் பத்தி நீ எழுதாத கட்டுரையா?"

"அப்பப் போடுங்க..."

"பெரியவர் டேபிளுக்கு அனுப்பறேன். அப்புறம் பகவான் செயல்..." என்று சிவராமன் நகர்ந்தார்.

"சரியான வியாபாரிடா!" என்றான் கிருஷ்ணன்.

"வாட் தே நீட் இஸ் சென்சேஷன், கிருஷ்ணா! இவங்களுக்கெல்லாம் உண்மையிலேயே இலங்கை மேல அனுதாபம் இருக்குதா?"

"இலங்கைப் பெண்கள் கற்பழிப்புன்னா அனுதாபப்படுவாங்கன்னு நினைக்கிறேன்... ஆனந்த்! காலைலேயிருந்தே டல்லா இருக்க... வீட்டுல என்ன? உள்நாட்டுக் கலவரமா?"

"ஒண்ணுமில்லைடா! குழந்தைக்குப் பேர் வைக்கறதைப் பத்தி கன்ஃப்யூஷன்..."

"இதுல என்ன கன்ஃப்யூஷன்? டெலிபோன் டைரக்டரியைப் பிரிச்சுட வேண்டியதுதானே? அபிநய சுந்தரியிலிருந்து ஸெரினா வரைக்கும்..."

"அதில்லை... என்னோட சாய்ஸ் விநோதினி!" என்றான் ஆனந்த்.

"அடப்பாவி! விநோதினியா? ஏண்டா குட்டையைக் குழப்பறே?"

"ரஞ்சனி துருவறா, அந்த விநோதினி யாருன்னு.."

"நீ சரியா பதில் சொல்லியிருக்க மாட்டே... கோபப்பட்டிருப்பே..."

ஆனந்த் பேசாமல் இருந்தான்.

"முட்டாள். ரஞ்சனியோட பொஸஸிவ்னஸ் உனக்குப் புரியலையா?

அதுல என்ன தப்பிருக்கு? இன் ஃபாக்ட் இதுதான் குடும்பத்தோட ரகசியம்... பொஸஸிவ்னஸ்..."

ஆனந்த் சிரித்தான். "காட்டுக்குப் போன சந்நியாசி நாட்டுல இருக்கறவங்களுக்கு உபதேசம் பண்ணாப் போல... நீ ஏண்டா கல்யாணம் பண்ணிக்கலை?"

"பொண்ணு கிடைக்கலை... நான் தேடற பொண்ணு!" என்றான் கிருஷ்ணன்.

"கிடைக்கவே மாட்டா. பௌர்ணமி

## வாசகர் அட்டைப்படம்-4

இந்த வார அட்டையில் வெளியாகியிருக்கும் வாசகர் அட்டைப்பட அழகி செல்வி. ஷெரிலா கிருஷ்ணன் சென்னை. மருத்துவப் படிப்பு படித்துவரும் மாணவி.

### நீங்கள் அழகிய இளம் பெண்ணா

நீங்கள் அழகிய இளம் பெண்ணா! குங்குமம் அட்டையில் இடம்பெற வேண்டுமா! உங்களது வண்ணப் படத்தை குங்குமம் முகவரிக்கு அனுப்பி வையுங்கள். சிறந்தவை தேர்ந்தெடுக்கப்பட்டு குங்குமம் அட்டையில் பிரசுரமாகும். ஆண்டு முடிவில் வெளியாகும் வாசகர் அட்டைப் படத்தில் சிறந்த அழகியை வாசகர் தேர்ந்தெடுப்பர். சிறந்த அழகிக்கும், தேர்ந்தெடுக்கும் வாசகர்களுக்கும் பரிசு உண்டு.

இரவுல, பீச்சு மணல்ல கஞ்சா அடிக்கற பொண்ணு... அதுதானே உன் கண்டிஷன்?..."

"கூடவே காஃப்காவும் படிக்கணும். க்ளாஸ்நாஸ்ட் பத்தியும் விவாதிக்கணும்... பர்ஸ்ல கொஞ்சம் பணமும் இருக்கணும்..."

"சான்ஸே இல்லை" என்றான் ஆனந்த்.

"அதை விடு! இதப் பாரு. அனாவசியமான தகராறு வேணாம். குடும்பத்துல ஊரடங்குச் சட்டம் போல! பேசாம சிஸ்டர் சொல்ற பேரையே வைச்சிடு. இல்லைன்னா நான் சொல்றேன்... ஸ்நேகலதா! எப்படி?"

"இல்லை கிருஷ்ணா! விநோதினியில் மாற்றமே இல்லை. ஐ டெல் யு. என்னால விநோதினியை மறக்கவே முடியாது..."

கிருஷ்ணன் முறைத்தான்.

குழந்தை ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தது.

ரஞ்சனிக்குத் தான் படித்துக்

கொண்டிருந்த நாவல் போரடித்தது. காதலைத் தவிர வேறெதுவுமே தெரியாதா இவர்களுக்கெல்லாம் ? காதல்! உனக்கு ஆனந்தின் மேல் இருக்கும் மையலுக்கு என்ன பெயர்? ஆனந்திற்கு விநோதினியின் மேல்.

ரஞ்சனிக்கு அந்த யோசனை தோன்றியது.

ஆனந்தின் அறைக்குள் நுழைந்தாள்.

அவனுடைய அறை ஒரு விநோதக் களேபரம். ஓரத்தில் கிடார் சாய்க்கப்பட்டிருந்தது. வரிசையாகப் புத்தகங்கள். நூறு வாட்ஸ் ஸ்பீக்கர்கள், துவாரபாலகர்கள் போல் காஸெட்டுகள்.

ஆனந்தின் மேஜை. அதில் சிதறியிருந்த பைல்கள், பேப்பர்கள், ரெஃபரன்ஸ் புத்தகங்கள்.

அந்த டைரி கிடைப்பதற்கு அரை மணிக்கும் மேல் ஆனது. பீரோவின் உள் அறையில் நகைப் பெட்டி போன்ற ஒன்றினுள் அது இருந்தது.

டைரியின் உள்ளே ஒரு பெண்ணின் புகைப்படம். ஏதோ ஒரு பிரத்தியேகக் கவர்ச்சி. 'ஒரா' என்று சொல்வார்களே, இருந்தது. உதடுகளின் இறுக்கத்தில் பிடிவாதமும், கண்களில் மின்னிய பிரகாசமும், அலங்காரமில்லாத எளிமையும், காலர் சட்டையும்... இது... இது தான் விநோதினியா? ஃபோட்டோவின் பின்னால் எழுதியிருந்தது– "அன்பான உங்கள் விநோ!"

டைரி சில வருடங்கள் பழையது. முழுதும் வெள்ளைப் பேப்பர்களாக இருக்க, ஒரே ஒரு தேதியில் மட்டும் சிவப்பான எழுத்தில், "விநோதினி! போய்விட்டாய்! மறக்க முடியுமா உன்னை?"

"போய் விட்டாய்!"

இறந்துவிட்டாளா?

ரஞ்சனிக்கு ஆனந்தின் மேல் கோபம் உடனே விலகியது.

வீட்டினுள் நுழையும்போதே ரஞ்சனி சிரித்தது ஆனந்திற்கு ஆச்சரியமாக இருந்தது. கோபம் மறைந்துவிட்டதா?

ஆனந்த் குழந்தையைக் கொஞ்சினான். ரஞ்சனியும் அருகில் வந்து குழந்தையை முத்தமிட்டு, "விநோதினிக் கண்ணு, தூக்கம் வருதா?" ஆனந்த் திடுக்கிட்டுப் பார்த்தான். என்ன சொன்னாள்? விநோதினியா?

ரஞ்சனி மெதுவாக, "டைரியைப் பார்த்தாச்சு" என்றாள்.

"டைரி?... யு மீன்..."

"அதான், பீரோவில் ஒளிச்சு வைச்சிருந்தீங்களே!"

ஆனந்த்திற்கு எதிலிருந்தோ விடுபட்ட உணர்வு தோன்றியது.

"ஸோ?" என்றான்.

"தெரிஞ்சாச்சு! செத்துப் போயிட்டாளா?"

ஆனந்த் மெதுவாகத் தலையசைத்தான்.

"சரி, சாப்பிட வாங்க! காலிஃப்ளவர், உங்களுக்குப் பிடிச்சது."

ரசம் விடும்போது கேட்டாள். "எப்படிங்க செத்துப் போனா?"

ஆனந்த் நிமிர்ந்து, "ரஞ்சனி! அவ செத்துப் போனது தெரிஞ்சப்புறம் நிம்மதியாயிட்டியா?" என்றான்.

ரஞ்சனி கோபப்படாமல் "ஸாரி" என்றாள். பிறகு எதுவும் பேசவில்லை.

"அப்பா! வீட்டுக்குள்ளே பனி வருது!" என்று ஜன்னல் கதவுகளை சாத்தினாள் ரஞ்சனி. இரவு விளக்கை ஏற்றினாள். ஆனந்தின் அருகில் படுத்துக்கொண்டாள்.

மலையாள சூப்பர் ஸ்டார் மம்முட்டி கமலைப் பற்றி அடித்த கமெண்ட்– "கமலைப் போல் வெரைட்டி ஆஃப் ஆக்டிங் யாராலும் பண்ண முடியாது. உதாரணமாய் ஒரு காலேஜ் பையனாய் ஒரு பெண்ணிடம் பூவைக் கொடுத்து 'ஐ லவ் யூ' சொல்லி நடிக்க கமலால் தான் முடியும். என்னால் முடியாது."

-மதுரை வீரன்



ராரா நடிகருக்கும் கௌ நடிகைக்கும் ஏற்பட்ட
நெருக்கத்தில் ர்ாரா நடிகரின் மனைவி கடுப்பாக
விஷம் குடித்து தற்கொலை முயற்சியில்
ஈடுபட்டாராம். இதனால் இனி 'எஸ்டாபிளிஷ்டு
ஹீரோயினிகளோடு' நடிப்பதில்லை என்ற
முடிவிற்கு வந்திருக்கிறாராம் நடிகர். இப்பொழுது
அவர் நடித்துக்கொண்டிருக்கும் படங்களின்
கதாநாயகிகள் டென்த், ப்ளஸ் டூ மாணவிகளாம்.

–மதுரைவீரன்

அவன் கையை எடுத்து மார்பில் வைத்துக்கொண்டாள்.

"ரஞ்சனி! ஐயாம் ஸாரி! கொஞ்சம் ஹார்ஷா நடந்துக்கிட்டேன் இல்லை? கிருஷ்ணன் திட்டினான்" என்றான் ஆனந்த்.

"பரவாயில்லைங்க. எனக்குப் புரியுது. உங்க ஃபீலிங்ஸ்! ஆனா... என்னை சிலசமயம் நெக்லக்ட் பண்றீங்க இல்லை, அதான்..."

"ஐயாம் ஸாரி ரஞ்சனி!" என்று அவளை அணைத்துக்கொண்டான்.

ரஞ்சனி அவன் தலையை அளைந்தபடி "உங்க லவ் ஸ்டோரி என்ன?" என்றாள்.

"வேணாம் ரஞ்சனி! தட் வாஸ் க்ருயல்..."

"ப்ளீஸ்... என்னால புரிஞ்சுக்க முடியும்..."

ஆனந்த் சில நொடிகள் யோசித்தான்.

"ஓகே. இனிமேல் மறைக்கறதுல எந்த லாபமும் இல்லை. அனாவசிய சந்தேகமும், போலித்தனமும் போதும். யு நோ? விநோதினி வாஸ் கிரேட்.

"நம்ம பொண்ணுக்கு அந்தப் பேர் வைக்கிற வரைக்கும்."

"யா! அவள் ஒரு ஈழத்துப் பொண்ணு!"

"சிலோனா?"

"ஆமாம்... பொழுது போகாம என்னைக் காதலிச்ச பொண்ணு இல்லை... பாக்கெட்ல கிரேனேட்ஸோட என்னைக் காதலிச்சவ... ஷி வாஸ் எ விமன் கொரில்லா..."

ஆனந்த் அந்த இயக்கத்தின் பெயரைச் சொன்னான்.

ரஞ்சனி அவனுடன் நெருங்கி, இன்னும் நெருங்கி ஒட்டிக்கொண்டாள். ஆனந்தின் குரல், இரவின் மௌனத்தில் கவிதை போல் மிதந்து வந்தது.

"ரஞ்சனி! உனக்குக் கதை கேட்கப் பொறுமை இருக்கா?"

"இந்த ராத்திரி முழுசும்" என்றாள்.

ஆனந்த் சொல்ல ஆரம்பித்தான். "நாலு அஞ்சு வருஷம் முன்னாலே... இலங்கையில நிலைமை மோசமான சமயம்...

–தொடரும்

# ஷாக்

ஒரு தொண்டனை இப்படி சிவந்து பேசிவிட்டோமே என்று ஒரு தலைவன் எண்ணி அதற்காக வருத்தப் பட்டால், அதுதான் அந்தத் தலைவன் அந்தத் தொண்டனை முன்னிட்டு தனக்குத் தானே கொடுத்துக் கொள்கின்ற கடும் தண்டனையாகும்.

"வடசேரிக்காரர்கள் எல்லா வியாபாரங்களும் செய்கிறார்கள். பெரிய வியாபாரங்களிலிருந்து கடலை வியாபாரம் வரையிலே செய்கிறார்கள் என்று சொன்னார்கள். சென்னையிலே அவர்கள் கடலை வியாபாரம் செய்வதோடு விட்டுவிட்டார்கள். கடலையே வியாபாரம் செய்துவிடாமல் இருக்கிறார்களே என்பதுதான் எனக்குள்ள மகிழ்ச்சி எல்லாம்.

-முதல்வர் கலைஞர்
கோ.அய்யாவு இல்ல மண விழாவில்


கலைஞர்


தமிழ்க்குடி மகன்

சில நேரங்களில் தமிழ்க்குடிமகனின் தனித்த மிழ் ஆர்வம் அளவு கடந்துவிடும். அவரது இல்லத் திருமண


நீனா குப்தா


சோனி

தெரியாமல் ரெஜிஸ்திரார் அலுவலகத்துக்குப்போய் என் குழந்தையின் பிறப்புச் சான்றிதழின் பிரதியை வாங்கி தன் பத்திரிகையில் போட்டு, குழந்தையின் தகப்பனார் யார் என்பதை வெளியிட்டுவிட்டார்! ஒரு சினிமா பத்திரிகை செய்வதைவிட மோசமான நிலைக்குப் போய்விட்டார் பிரிட்டிஷ் நந்தி! பிரபல பத்திரிகை என்று சொல்லப்படும் 'வீக்லி'யே இப்படிச் செய்தால் மற்ற பத்திரிகைகளைப்பற்றி நான் என்ன சொல்ல? இனி நான் சாகும்வரை எந்த பத்திரிகைக்காரரையும் பார்க்க விரும்பவில்லை.

-பிரபல டி.வி. நடிகை நீனா குப்தா.

எனக்கு இளையராஜாவ பார்க்க பொறாமையா இருக்கு... நாங்க கஷ்டப்பட்டு, வெய்யில், மழை, சோறுனு பார்க்காம நடித்து, விருப்பம் இருந்தாலும், இல்லாவிட்டாலும் பெண்களுடன் கட்டிப் பிடித்து நடித்து சம்பாதிக்கிறோம். இவரு என்னடான்னா வீட்ல ஏ.சி., கார்ல ஏ.சி., ரிக்கார்டிங்ல ஏ.சி.னு அலட்டிக்காம சம்பாதிக்கிறாரு. அடுத்த ஜென்மத்திலியாவது நான் இளையராஜாவா பொறக்கணும்.

-ரஜினி



படத்தை இயக்கியதன் மூலம் சிறந்த இயக்குநர் விருது பெற்ற அடூர் கோபாலகிருஷ்ணன்

வாரங்கள், புண்ணிய நதிகள், வனாந்திரங்கள், பாலைவனங்கள், கடலோரங்கள்..."

"அதனால்...?"

"தெய்வம் உங்களை சும்மா விடாது!"

வார்டர் சொன்னான்.

"நான் பாபமொண்ணும் செய்யவில்லையே."

நான் கேட்டேன்.

"இன்றைக்கு நடத்தியது பங்கர தீவட்டிக் கொள்ளையே..."

வார்டனுக்கு ஆச்சரியமாக இருந்தது.

அவன் கேட்டான்.

"இன்னிக்கு நான் என்ன தீவட்டிக் கொள்ளை நடத்தினேன்?"

நான் சொன்னேன்.

"வார்டர் சாகிறான்... ஆத்மா தெய்வத்தின் மகா சன்னிதியில் செல்கிறது. கடவுள் கேட்கிறார், தரித்திர வாசியான ஹே வார்டரே...! பாவம், அந்தப் பஷீரின் ஒரு பிளேடையும், ஒரு நெருப்புப் பெட்டியும், ரண்டு கட்டு பீடியும் எங்கே?"

வார்டர் நிற்கின்றான், நான் நடந்துகொண்டே விளித்தேன்.

"வாரும்... வாரும்... என்னை கூட்டிகிட்டுப் போய் கூட்டில் அடைச்சுக்கிட்டு நீர் போகவேண்டாமா...?"

வார்டர் அசையவில்லை. பேசவில்லை. அவன் குலுங்கிக் குலுங்கிச் சிரித்தவாறு தொப்பியை எடுத்தான். பின் எனது சொத்துக்கள் எல்லாவற்றையும் திரும்பத் தந்தான்.

"நல்ல வார்டர்..." என்றேன் நான்.

"மரணப்படுக்கையில் காந்திஜி என்று இன்னைக்கு காலம்பர அந்த போலீஸ் இன்ஸ்பெக்டர் என்னிடம் சொன்னார். நீங்க வேறு ஏதாவது விசேஷங்கள் அறிஞ்சீங்களா, வார்டர்?"

வார்டர் சொன்னான்.

"அவர் ஆரஞ்சு நீர் அருந்தி உண்ணாவிரதத்தை முடித்துக் கொண்டார்."

ரொம்ப சந்தோஷம். மோகன்தாஸ் கரம்சந்த் காந்தி நீடூழி வாழட்டும்!

(இன்னும் வரும்)

நன்றி: 'தற்கால மலையாள இலக்கியம்' வெளியீடு

சில வருடங்களுக்கு முன்னால்... **3**

"என்னடாது! குருவி சுடறா மாதிரி சுடறாங்க... ராமேஸ்வரத்துல குண்டு சத்தம் கேக்குதாமே?" என்றான் கிருஷ்ணன்.

"ஜெனோஸைட்! சிலோன்ல இப்ப தமிழன்கறதுதான் கெட்ட வார்த்தை!" என்றான் ஆனந்த்.

கிச்சா டெலிபிரிண்டர் செய்தியுடன் பரக்கப் பரக்க வந்தான். "பயங்கர நியூஸ்!... கிட்டத்தட்ட மூவாயிரம் தமிழர்கள் காலி! அனுமார் மாதிரி கொளுத்தறாங்க சிங்களங்க... நடுத் தெருவில கற்பழிப்பாம்... கடையெல்லாம் துவம்சம்... கொழும்புவை இழுத்து மூடிட்டாங்களாம்... எங்கே ஐசக்?... யோவ், மசால்வடையா திங்கறே?...தமிழன் மேல அடக்குமுறைய்யா!... அது என்ன தக்காளி சட்னியா?.... நாலடியார் எங்க?..."

ஆனந்த் கிருஷ்ணனைப் பார்த்து, "கிருஷ்ணா, லெட்ஸ் கெட் அவுட் ஆஃப் ஹியர்!" என்றான். வெளியே வந்தார்கள்.

சிகரெட் பற்ற வைத்துக் கொண்டார்கள்.

"என்னடா அநியாயமா இருக்கு? ஆஃப்டர் ஆல், அவங்களும் பிரஜைகள் தானே?..."

## கிருஷ்ணா டாவின்ஸி



"யார் சொன்னது, சேனநாயகா தெரியுமா? 1948–லே பிடுங்கிட்டார்... எதை? பிரஜா உரிமையை! ... ஐ மீன், இந்தியவழித் தமிழர்கள்!"

"அநியாயம்டா! வேற இனம்ங்கறதுக்காகப் பழிவாங்கறதா?"

"பாலிடிக்ஸ்! ... சரி வா! காஸினோ போலாம்... ஜேம்ஸ் பாண்ட்!.... பொண்ணுங்களை சாப்பிடுவான்... தரிசனம் கிடைக்கும்..."

"சே!... ஐ யாம் நாட் இன் மூட்!" என்றான் ஆனந்த்.

"எதுக்கு? சிலோனா? சக தமிழனுக்கு நேரும் கொடுமை?"

## குங்குமத்தில் மலரும் நினைவுகள்!

திரையுலகக் கலைஞர்களுக்கு மட்டும்தானா மலரும் நினைவுகள்? உங்கள் வாழ்க்கையில் எத்தனை சுவையான திருப்பங்களை சந்தித்திருப்பீர்கள்! அது நகைச்சுவையுடன் கூடியதாக இருக்கலாம். கண்களை குளமாக்கக் கூடிய நிகழ்ச்சியாக இருக்கலாம். பாசத்தை கொட்டக்கூடிய சம்பவமாக இருக்கலாம். முக்கிய பிரமுகர்கள் சந்திப்பை ஒட்டியதாக இருக்கலாம்!

உங்கள் கல்லூரி, காதல், மணவாழ்க்கை, குடும்பப் பிரச்னைகளின்- மலரும் நினைவுகளை எழுதி அனுப்புங்கள்.

நான்கு பங்கங்களுக்கு மேற்படாமல் எழுதி அனுப்புங்கள்.

சிறந்த படைப்புக்கு முதல் பரிசு ரூ.250/- . இரண்டாவது பரிசு. ரூ.150/-, மூன்றாவது பரிசு ரூ.100/-. பிரசுரிக்கப்படும் மற்ற கட்டுரைகளுக்கும் சன்மானம் உண்டு.

"தெரியலை..."

"குட். அந்த உணர்வு எனக்கும் இருக்குது... சும்மா மேலோட்டமா இப்படிப் பேசறேன்.... நியூஸ் படிக்கும்போது தொண்டையை அடைக்கறாப்ல... இதுதான் கலாச் சாரத் தொடர்பா?... இல்லைன்னா திராவிட உணர்வு?... ஐ நீட் அனதர் சிகரெட்...." என்றான் கிருஷ்ணன்.

"கிருஷ்ணா, நாம ஏதாவது செய்ய வேண்டாமா?"

"அறிக்கை விடலாமா? ஆனா யாரும் கேக்க மாட்டாங்க!.... இல்லைன்னா பத்துபேரைக் கூப்பிட்டுக்கிட்டு ஜெ. ஆர். ஜெ. ஒழிக!ன்னு கோஷம் போடலாம்... பேப்பர்ல வரும், மாபெரும் ஊர்வலம்னு..."

"இல்லை. வி ஆர் ப்ரஸ் பீப்பிள்... மீடியா நம்ம கையில்... கிருஷ்ணா! ஏதாவது செய்யணும்..." என்றான் ஆனந்த்.

"சிலோன் போகலாமா? நேரடி ரிபோர்ட் மாதிரி... ஆனா திரும்பி வருவோமான்னு சந்தேகம்! திராவிட முகத்தைப் பார்த்தாலே சுடச் சொல்லி உத்தரவாமே?"

"எக்ஸாஜரேஷன்! - கிருஷ்ணா, எனக்கு என்ன செய்யறதுன்னே புரியலை..."

"எனக்கும் எ.செ.புரியலை!"

தோள்களைக் குலுக்கிக்கொண்டு பிரிந்தார்கள்.

தினம் தினம் ரத்தம் தோய்ந்த செய்திகள் பாக் ஜலசந்தியைக் கடந்து வந்தன. ராமேஸ்வரக் கரையில் சோழனின் கடற்படை போல் கட்டு மரங்களில் திரைகடலோடிய தமிழர்கள் பரிதாபமாய்க் குவிந்தார்கள். சிங்கக் கொடி பறந்த ஸ்ரீலங்கா கோஸ்ட் கார்டுகள் நடுக்கடலில் படகு மக்களை சுட்டுத்தள்ளினார்கள். ஆர்மி தமிழர்களின் வீடுகளில் புகுந்தது – தமிழ்ப் பெண்கள் கற்பழிப்பு – 'தமிழச்சி! உன் வயிற்றில் சிங்கள விதையை நட்டு விட்டேன்' – 'இந்திய அரசாங்கம் தூங்குகிறதா' என்று தமிழகத் தலைவர்கள் ஆவேசப் பட்டார்கள். தமிழ்ப் பகுதிகளில் சிவில் சப்ளைத் தொடர்புகள் அழிக்கப் பட்டன. பெட்ரோல் விலை லிட்டர் நூறு ரூபாய்– நூலகம் நாசம்– லட்சம் அரிய தமிழ்ப் புத்தகங்கள் அழிந்தன.... தமிழ் நாட்டின் தினசரிகளை இலங்கை ஆக்ர மித்தது.

ஆனந்த் லைப்ரரி சென்று சில புத் தகங்களை எடுத்து வந்தான். எல்லாம் இலங்கைத் தமிழினம் பற்றிய புத்த கங்கள். இலங்கைப் பிரச்னையின் ஆரம்ப நுனியிலிருந்து படிக்கத் தீர் மானித்திருந்தான்.

வீட்டில் யாருமில்லை. பெரிய வீடு. அமைதியான வீடு. அப்பாவைக் காணோம். அப்பா கொஞ்ச நாளா கவே சரியில்லை. ருத்திராட்ச மாலை அணிந்து விட்டார். இரவில் தூக்கம் வராமல் மாலையை உருட்டியபடி 'ததர்ஸ கிரிஸ்ருஸ்கஸ்தான்...!' என்று ஓத ஆரம்பிக்கிறார். அப்பாவிற்கு தனிமையிலிருந்து விடுதலை வேண்டும் என்பது ஆனந்திற்குப் புரிந்தது. வீட்டில் யாருமில்லாத தனிமை.

ஆனந்தைப் புரிந்து கொள்ள அவர் விரும்பவேயில்லை. அவனுடைய கட்டுரைகளை அவர் படிப்பதில்லை. கதைகளைப் படிப்பதில்லை. ஆனந் தின் நண்பர்கள் வீட்டில் அவனுடன்

அரசியல் நிலைமைகள் குறித்து விவாதம் செய்யும்போது கண்டு கொள்ளமாட்டார். ஆனந்தின் புத்தி சாலித்தனத்தின் மேல் அவருக்குத் தாழ்வு மனப்பான்மையோ என்று சந்தேகம்... மதத் தத்துவங்கள் அவருடைய தனிமை எண்ணங்களுக்கு எண்ணெய் ஊற்றியதில் சிக்கென்று பிடித்துக் கொண்டு விட்டார்... அடிக்கடி காணாமல் போகிறார்...

ஆனந்த் புத்தகத்தில் ஆழ்ந்தான்.

இரவு பதினொரு மணியளவில் அப்பா வந்தார். மஞ்சள் நிற சால்வை போர்த்தி. நெற்றியில் திருநீறுடன். ஆனந்திற்குப் பிடிக்காத ஏதோ வாசனையுடன் (ஜவ்வாது?). "ஆனந்த்! சாப்டுட்டியா?"

"இல்லைப்பா! உங்களுக்காகத் தான் வெய்ட் பண்றேன்..."

"கிட்டா போய்ட்டானா?"

"அப்பவே!"

கிட்டா வீட்டு சமையற்காரன்.

"சரி, வா! சாப்பிடலாம்!" என்றார்.

சாப்பிட ஆரம்பித்தார்கள். அமைதி நேரத்தைத் தின்றது.

"எங்கேப்பா போயிருந்தீங்க?"

"மயிலாப்பூர்ல ஒரு உபன்யாசம்... சுந்தர காண்டம்!" என்றார்.

"அப்படியா? சுந்தரகாண்டம் காதால கேட்டாலே வியாதியெல்லாம் போயிடுமாமே? உங்களுக்கு ஆஸ்த்மா குறைஞ்சிடுத்தா?"

"ஆனந்த். உனக்கு நம்பிக்கை இல்லைன்னா விட்டுரு..." என்றார்.

"ஸாரி! கிண்டல் பண்ணலை. மத்யப் பிரதேஷ்ல லங்கான்னு ஒரு மலை இருக்கு தெரியுமா? ஒரு காலத்துல தண்ணி சூழ்ந்திருந்ததாம். வால்மீகி ராமாயணத்திற்கும் கம்ப ராமாயணத்திற்கும் எவ்வளவு வித்யாசம் இருக்குன்னு அமர்தலிங்க அய்யர் ஒரு புஸ்தகம் எழுதியிருக்கார்..."

"ஆனந்த்! அப்பளம் போடட்டுமா?" என்றார்.

ஆனந்த் சிரித்தான். "இன்காரிஜிபிள்! அப்பா! இலங்கையில என்ன நடக்குதுன்னு தெரியுமா? அதாவது இன்னைத் தேதியில...?"

"சண்டை! தமிழனுக்கும் சிங்களனுக்கும்..." என்றார்.

"இப்ப சிலோன்ல ஆயிரக்கணக்கான சீதைங்க இருக்காங்க... யாரு அவதாரம் எடுத்து வரப் போறாங்களோ?"

"ஆனந்த்! நான் காசி, ரிஷிகேஷ் போகலாம்னு இருக்கேன்..."

"போய்ட்டு வாங்க!" என்றான்.

"ஆனா சில கடமைகளெல்லாம் இருக்கேப்பா?" என்றார்.

"புரியலைப்பா! ரசம் விடுங்க!"

"என் பிள்ளைக்கு நான் செய்ய வேண்டிய கடமை! உனக்கு சொந்த வீடு குடுத்துட்டேன்... சொத்து குடுத்துட்டேன்... அம்மா இல்லாத குறை தெரியாம வளர்த்துட்டேன்... இன்னும் ஒண்ணே ஒண்ணு பாக்கி..." என்றார்

"கல்யாணமா?"

"ஆமாம்பா... எதிர்காலத்துல உனக்குன்னு ஒரு குடும்பம்..."

"அப்பா! ப்ளீஸ்... என்னை கம்பெல் பண்ணாதீங்க... என்னோட வழி வேற... ஐ யாம் நாட் ஃபர் யூஷுவல் லைஃப்... எனக்கு சில 'ஐடியாஸ்' இருக்குது..." என்றான்.

"அதுக்கும் இதுக்கும் என்ன சம்பந்தம்? பிடிவாதம் பிடிக்காதே!"

"இன்னும் ஒரு அப்பளம் போடுங்க!" என்றான்.

"ஆனந்த்! ஏஜிஸ் ஆஃபீஸ் சங்கரன் இருக்காரில்லை? அவரு பொண்ணு... சீதாலட்சுமி மாதிரி... வைஜயந்தின்னு பேரு..."

"அப்பா! ஐ ஸெட் டோன்ட் கம்பெல் மீ" என்றான்.

சாப்பிட்டு எழுந்தார்கள். அப்பா அவருடைய அறைக்குள் சென்றார். மெதுவாக ஸ்லோகம் படிக்க ஆரம்பித்தார்.

ஆனந்த் பதினொன்றரை மணி பி.பி.ஸி. நியூஸ் கேட்டான். தலைப்புச்

திருச்செங்கோட்டு மலைச்சரிவில் அறுபது அடி நீளமுள்ள பாம்பின் புடைச்சிற்பமொன்று உள்ளது. ஐந்து தலை நாகம் மலைமேல் உடலை நீட்டிப் படுத்திருப்பதுபோல இச் சிற்பம் செதுக்கப்பட்டுள்ளது. இதுபோன்ற பெரிய பாம்புச் சிற்பம் உலகில் எங்குமே இல்லை!

செய்தியில் இலங்கை இடம் பெற்றிருந்தது. வெலிக்கடை சிறையில் புகுந்து தமிழ்க் கைதிகள் கொலை... தமிழர் பகுதியில் புதிய தீவிரவாதக் குழுக்கள் உதயம்... வன்முறை பற்றி எரிகிறது.

ஆனந்த் புத்தகத்தைப் படித்து முடித்து உறங்கச் சென்றபோது மணி ஒன்றரை.

ராய்ட்டரில், கொழும்பில் பணிபுரியும் ஆனந்தின் நண்பன் ஸில்வா நிறைய செய்திகளை அடிக்கடி அனுப்பினான், புகைப்படங்களுடன். ஆனந்த் சில வருடங்களுக்கு முன்னால் இலங்கை சென்றபோது ஸில்வா நண்பனாயிருந்தான். 'மெர்க்குரி ஸ்டார்' தினசரியில் பணிபுரியும் சிங்களன். அவனுடைய விஷயதானம் ஆனந்திற்கு நிறைய உதவியது.

ஆனந்தின் ஸ்பெஷல் கட்டுரைகள் எல்லா பத்திரிகைகளிலும் வெளிவர ஆரம்பித்தன. வடஇந்திய பத்திரிகைகள் மொழி பெயர்த்துப் பிரசுரித்தன.

கிருஷ்ணன் காமிரா மாலையுடன் வந்தான். ஆனந்தைத் தோளில் தட்டி, "எக்ஸிபிஷன் ஒண்ணு நடக்குது... ஒரு தமிழ்த் தீவிர இயக்கத்தோட பிரச்சாரக் கண்காட்சி... போகலாமா?"

கிளம்பினார்கள்.

கூட்டம் அலைபாய்ந்தது. "ச்ச... ச்ச... இங்கப் பாருப்பா... சுட்டுக் கொன்னிருக்காங்க... எவ்வளவு சடலம் பாரு..."

பெரிய பெரிய புகைப்படபானர்கள் வைக்கப்பட்டிருந்தன. "கொழும்பில் கொளுத்தப்பட்ட தமிழர்களின் வீடுகள்", "உயிரோடு எரிக்கப்பட்ட தமிழ்க் குழந்தை", "எமது தலைவர் சிவகுரு. தோழர்களுடன்", "தமிழீழ வரைபடம்"

"சே! பாவம்டா! உண்மையிலேயே படுகொலை நடந்திருக்குது...!" என்றான் கிருஷ்ணன். "எ நேக்கட் மாஸக்கர்!"

தாடி வைத்த இறுக்கமான முகமுடைய இளைஞர்கள் ஆங்காங்கே நின்றிருந்தனர். ஒரு சின்னப் பையன் புத்தகங்களை விற்குமிடத்தில் நின்றிருந்தான். அவன் கண்கள் பயத்தில் அடிபட்டிருந்தன.

"தம்பி! உன் பேரு?" ஆனந்த் கேட்டான்.

"செல்வநாயகம்!" என்றான்.



"அந்த நடிகை ரொம்ப துணிச்சல்காரின்னு எப்படி சொல்றே..."

"தன்னை எதிர்த்துப் பேசின அவங்க அம்மாவையே மாத் திட்டு, வேறே ஒருத்தியை அம்மாவா அறிவிச்சிட்டாங்க...!"

—எஸ்.ராகவேந்திரா

"நீ ஏன் இந்தியாவிற்கு வந்தே?"

"அங்கே கரைச்சல் அதிகமாயிட்டது. என் அப்பா அம்மாவை ஆமி கொன்னுட்டது... அங்கே இனி சீவிக்கியலாது..."

"பாதடிக்! ஐ திங்க் ஹி இஸ் கோயிங் டு மேக் எ கொரில்லா... ரொம்ப சின்னப் பையன்... ஸ்கூல் போக வேண்டியவன்!"

"தம்பி! நீ துப்பாக்கி சுடுவியா?" என்று கேட்டான் கிருஷ்ணன். "பையில வைச்சிருக்கியா? திடீர்னு எடுத்து சுடுவியா? ராம்போ மாதிரி!"

அப்போது அந்தப் பெண் அங்கே தோன்றினாள். முரட்டுத்துணியில் பாண்ட்டும் சட்டையும் அணிந்திருந்தாள். அலங்காரம் ஏதுமின்றி உக்கிரமான கண்களுடன், "சின்னப் பொடியனிடம் என்ன கதைக்கிறீங்கள்? எங்கடை நாட்டில் நடக்கிற இனக்கலவரம் பற்றி உமது பக்கத்திலை அனுதாபமில்லாட்டும் கேலி செய்யாது இருங்கள்.. ஏ. செல்வா! அவங்களிடை நீ என்ன கதைக்கிறாய்? உள்ளே வா!..." என்று இழுத்துச் சென்றாள்.

ஆனந்த் செய்வதறியாது. "மிஸ்... ப்ளீஸ்!... தப்பாப் புரிஞ்சிக்காதீங்க... வி ஆர் ரியலி வொர்ரீட் அபவுட் த ஜெனோஸைட்..."

அவள் முழுசாகத் திரும்பி, "தமிழிலை கதைக்க முதலிலை கத்துக்குங்க!" என்று சொல்லி உள்ளே சென்றாள். அவள் முகம் உடனே ஆனந்தின் மனதில் பதிந்தது.

—தொடரும்

*'பொண்டாட்டி தேவை' விமர்சனத்திற்கு, அதன் இயக்குநர் பார்த்திபன் அளித்த பதில்—*

கதாநாயகனைப் பொறுத்தவரையில் வேலை கிடைத்து, நிரந்தர வருமானமும் வந்தவுடன் தன் துணையை தேட ஆரம்பிக்கின்றான். நாயகி சாந்தியைப் பார்த்தவுடன் தன் நாயகியாக கற்பனை செய்துகொள்கிறான்.

பர்ஸைத் தவறவிட்டு வந்த நாயகியை காப்பாற்றப்போய் செக்கிங் இன்ஸ்பெக்டரிடம் மெமோ வாங்கும்போதும், படிக்கட்டி லிருந்து கீழே விழாமல் காப்பாற்றியபோதும், நாயகன் கன்னத்தில் தன்னுடைய குங்குமம் ஒட்டியிருப்பதை பார்த்து துடைத்துக்கொள்ளுங்கள் என்று வெகுளித்தனமாகச் சொல்லும்போதும், நாயகிக்கு நாயகன்மேல் காதல் பிறக்கவில்லை.

ஆனால்... ஹீரோ தனக்கும், தன் தாய்க்கும் உள்ள affection—ஐ சொல்லி மனம் கலங்குவதை பார்த்த நாயகி, அம்மா மேல் இவ்வளவு பிரியம் வைத்திருக்கும் இவரால் மனைவி மேலும் கொள்ளை பிரியம் வைக்கமுடியும் என்று நினைத்துதான் I love you சொல்கிறாள். இந்த காதல் உடனடியாகப் பிறந்த காதலே கிடையாது.

அந்த காதலில் அழுத்தம் இல்லை என்பதை நம்பமுடியவில்லை. ஒரு காட்சியில் நாயகனின் அறைக்குள் நாயகி 'ஆரோரோ பாட்டுப்பாட நானும் தாயில்லை உன் பேர் சொல்லி வாழ்த்துக் கூற நீயும் சேய் இல்லை' என்று பாடிவிட்டு கீழே இறங்கும்போது சாந்தியின் தந்தை பார்த்துவிடுகிறார். உடனே அவளை வீட்டிற்கு இழுத்து வந்து கன்னத்தில் அறைந்து, நமக்கு மானம்தான் முக்கியம் என்று சொல்லும்போது, தியேட்டரில் நிறைய ஜனங்க "போடா..." என்று கத்துகிறார்கள். நானே கண்கூடாக நேரில் பார்த்த சம்பவம் இது. அந்த அளவு அவர்களது காதல் ரசிகர்களை ஒன்றிப் பார்க்க வைத்திருக்கிறது.

புதியபாதையின் கேரக்டரின் பாதிப்பு என்னையுமறியாமல் வந்துவிட்டது. அதேபோல இரட்டை அர்த்த வசனங்களும் எனக்கே தெரியாமல் வந்துவிட்டது. மற்றவர்கள் சொன்னபோதுதான் தெரிந்தது. இனிமேல் இந்த தவறு நிகழாமல் பார்த்துக் கொள்கிறேன்.

கல்லூரி மாணவர்களின் குறும்புதான் Good morning. இதை காற்றடித்து மாராப்பு விலகும்போது சொல்லாமல் காலையில் மட்டும் சொல்லியிருந்தால் நன்றாக இருந்திருக்கும்.

—ரவிராதா.

## புதிய பாதையின் கேரக்டரின் பாதிப்பு...



டெஸ்ட் பந்தயங்களில் செஞ்சுரி அடிப்பது என்பதே ஒரு சாதனை. அந்தச் சாதனையில் சாதனை புரிந்திருக்கிறார் பாகிஸ்தானைச் சேர்ந்த முதாசர் நாஸர் எப்படி? இங்கிலாந்திற்கு எதிராய் லாகூரில் விளையாடிய ஒரு பந்தயத்தில் செஞ்சுரி அடிக்க இவர் எடுத்துக் கொண்ட நேரம் 9 மணி 51 நிமிடங்கள்! அதன் பிறகு இவ்வளவு ஆமை வேகத்தில் எவரும் செஞ்சுரி அடித்ததேயில்லை...



னவோ... ஏதோ... திவ்யமான நிசப்த சங்கீதம்போல... நாத பிரம்மத்தின் அனந்தமான விகாசம்... எல்லாமே அதில் முழுகிப் போய்விட்டன. ஆனந்தமான வியப்புடன் நான் நின்றேன். எனது வியப்பும், ஆனந்தமும் கண்ணீராய் மாறியது. நான் அழுதேன். இயலாமையோடு அழுதவாறு நான் ஓடினேன். லோக லோகங்களின் ஏ சிருஷ்டிகர்த்தா...! என்னைக் காப்பாற்று... இதை என்னில் உட்கொள்ள என்னால் சாத்தியமில்லை... உனது இந்த மகா பிரபாவம்... இந்த மகா அற்புதம்... நான் ரொம்பவும் சிறிய ஒரு ஜீவன்... என்னால் முடியாது, என்னை ரட்சி..."

பிறகு எனக்கு நினைவு வந்தது வார்டர் காலையில் வந்து தாளைத் திறந்து கதவைப் பிடித்துக் குலுக்கிய பின்தான்.

"சலாம் உலகமே....!" நான் எழுந்தேன். துண்டு பீடியையும் பற்ற வைத்துக்கொண்டு சென்று ராஜாங்கமாகத்தான், காலைக்கடன்களை ஆரம்பித்தேன்.

ஒரு கூரிய வேம்பின் குச்சியால் பல் விளக்கினேன். குழாயின் கீழே நின்று குளித்தேன். பின் ஜெயில் ஆடைகளை அணிந்துகொண்டு கஞ்சிக்குள்ள பாத்திரத்தை எடுத்து அலம்பிவிட்டு தலைவர்களைக் காணச் சென்றேன். அங்கிருப்பவர்கள் யாவருமே தலைவர்கள்தாம். எல்லோரையும் பார்த்தபின் பெரிய ஒரு பாத்திரத்தில் கஞ்சி வந்தது. செழிப்பாக சட்டினியும் சேர்த்து கஞ்சி குடித்தேன். வாஸ்தவத்தில் குடித்தது 'கஞ்சேர'தான். இந்த 'கஞ்சேர'வின் முறையைச் சரியாக விளக்குகிறேன்.

கஞ்சித் தண்ணீரை முதலில் கொஞ்சம் கூடுதலாய் குடித்துவிட வேண்டியது. பிறகு சட்டினி போட்டுப் பிசைந்து ஸ்டைலாகச் சாப்பிட்டு விட வேண்டியது. அதற்குப்பின் கை, வாய் பாத்திரம் எல்லாம் அலம்ப வேண்டும். அதன்பின் பச்சைத் தண்ணீர் கொஞ்சம்கூடக் குடிக்க வேண்டும்... சுகமான வாழ்க்கை... இப்படி சுகம் வரவழைத்தபின்னர் ஒரு நெருப்புக் குச்சியை இரண்டாய் வகிர்ந்து ஒரு பீடி பற்றவைத்து இழுத்தேன். அதை அணைத்து வைத்துவிட்டு உலகம் பார்க்கக் கிளம்பினேன். அப்படியென்றால் சிறை முழுதும் விஜயம் செய்து பார்வையிடத்தான். **(இன்னும் வரும்)**

நன்றி: 'தற்கால மலையாள இலக்கியம்'

வெளியீடு: நர்மதா பதிப்பகம், சென்னை - 17

# விநோதினி

என்னடா, இப்படித் திட்டிட்டுப் போறா...? தமிழைப் பார்த்தா யாழ்ப்பாணம் போ... என்ன சொல்லிட்டேன்னு திட்டறா?"

"கிருஷ்ணா! உனக்கு சூழ்நிலையே புரியாதா? இந்த இடமே கொஞ்சம் நெவல்யூஷனரியா இருக்கு... நீ என்னடான்னா..."

"திடீர்னு மழை பெஞ்சாப்ல பொடியன், கதைக்கறீங்கன்னு... ஒண்ணுமே புரியலை... சுடுவியான்னு தானே கேட்டேன்?"

"ஷி வாஸ் வெரி பிரைட்!" என்றான் ஆனந்த்.

"வெரி?"

"பிரைட்! அவ கோபம் எனக்குப் பிடிச்சிருக்கு... கிருஷ்ணா, ஒரு பேட்டி எடுத்துரலாம்..."

"சரிதான்... அவளைப் பார்த்தாலே படபடங்குது..."

ஆனந்த் நேராக ஒரு தாடிக்காரனிடம் சென்றான்.

"ஹலோ!" என்றான்.

அவன் தலையசைத்தான். கம்பீரமாக சிலை போல் இருந்தான்.

"என் பெயர் ஆனந்த். இது கிருஷ்ணன். நாங்க பத்திரிகைக்காரங்க..." பத்திரிகை பெயரைச் சொன்னான். தாடிக்காரன் உடனே பிரகாசமானான்.

"ஓம். போன வார இதழிலே கட்டுரை ஒண்ணு அவதானித்தேன். பலாலி ராணுவ முகாம் சித்ரவதை பற்றி... உமது பத்திரிகைதானே அது?"

"ஆமாம்..."

"உள்ளை வாருங்கள்!" என்று திரையை விலக்கி அழைத்துச் சென்றான்.

டென்ட் போன்ற அந்த இடத்தில் பெரிய பெரிய வெள்ளை பேனர்களில் போஸ்டர் ஒட்டிக் கொண்டும், எழுதிக் கொண்டும் நிறைய இளைஞர்களும் ஒரு சில பெண்களும் சுறுசுறுப்பாக இருந்தனர்.

இரண்டு நாற்காலிகள் தரப்பட்டன. எதிரேயிருந்த நாற்காலியில் ஒருவன் வந்து அமர்ந்தான். தீவிரமான முகம். பிரகாசமான பெரிய கண்கள். வணக்கம் சொன்னான்.

"என் பெயர் ஸொலமன்!" என்றான்.

"வணக்கம்! சில கேள்விகளைக் கேட்கலாமா? எங்கள் பத்திரிகைக்காக?" ஆனந்த் 'நோட்புக்'கை பிரித்துக் கொண்டான்.

"கேட்கலாம்!" என்றான் ஸொலமன்.

கிருஷ்ணா டாவின்ஸி



"நான் பல பத்திரிகைகளில் கட்டுரைகள் எழுதிக் கொண்டிருந்தேன். இனிமேல் அந்த வருமானம் எனக்கு வராது. எழுதி சம்பாதித்த வருமானத்தில் நான்கில் ஒரு பங்குதான் இந்த புதிய பதவி மூலம் எனக்கு கிடைக்கும். இனி எப்படி என் வாயை மூடிக் கொண்டிருப்பது என்பது எனக்கு ஒரு பிரச்சினை தான்!"

—லண்டனில் புதிய இந்திய ஹை கமிஷனராக பதவியேற்றிருக்கும் குல்தீப் நய்யார் கூறியது.

—அனிதா ராமச்சந்திரன்

கிருஷ்ணன் சில புகைப்படங்களை எடுத்தான்.

"உங்கள் இயக்கத்தில் எத்தனை பேர் இருக்காங்க...?"

"வடக்கிலை மட்டும் எமது இயக்கப் போராளிகள் ஆயிரத்திற்கும் மேல் இருக்கிறார்கள். ஏனைய பாகங்களில இன்னும் இரண்டாயிரம் பேர்..."

"மூவாயிரம் பேர்களை வைத்துக் கொண்டு உங்களால் ஸ்ரீலங்கா ஆர்மியை எதிர்க்க முடியுமா?"

ஸொலமன் சிக்கனமாகச் சிரித்து, "கூலிக்காகப் போரிடும் பத்தாயிரம் காடையர்களுக்கு வெறும் நூறு இலட்சியப் போராளிகள் சமம்!" என்றான். "எம்முடைய லட்சியம் நிறைவேறும்வரை எமக்கு உறக்கமில்லை.."

ஆனந்தின் கண்கள் அலைந்தன. எங்கே அந்தக் கோபமான பெண்?

கிருஷ்ணன் கேட்டான். "உங்களுடைய தனிநாடு கொள்கை நியாயமானதுதான் என்று நினைக்கிறீங்களா?"

"ஐயா, கேள்வி இப்போது அது இல்லை. ஷெல்களுக்கு நடுவே எமது மக்கள் சீவித்துக் கொண்டிருக்கிறார்கள்... எமது ஈழப்பகுதிக்கு நீர் நேரில் வந்தால் இப்பிடிக் கேள்விகள் கேக்க மாட்டீங்கள். றோட்டில் போகும் அப்பாவித் தமிழர்களை வேணுமெண்டு பிடித்துப்போய் சித்திரவதை செய்யிறாங்கள். காலமையோ, இரவுப் பின்னேரமோ எமது மக்கள் வெளியாலை நடமாட முடியாது...பாடசாலையிலும், காலேஜிலும், உத்யோகத்திலும் தமிழ்ப் பிள்ளைங்களுக்கு இடமில்லை.. தமிழன் வைக்கும் கடைகளைக் கொளுத்தறாங்கள்... எல்லாவற்றிற்கும் சிங்கள கவண்மென்ற்றின் அங்கீகாரம் இருக்குது... சுதந்திரமாய் திரிய முடியாது. பெட்டைகள் வீட்டிலை பதுங்கியிருக்காளவை... எங்கேயும் ஆர்மி டிரக்குகள் நிக்கிது..."

"நீங்க இந்தியாவிடம் என்ன எதிர் பார்க்கிறீங்க? இந்திய ராணுவம் நுழைந்து உங்களுக்குத் தனி நாடு வாங்கித் தரணுமா?"

"தேவையில்லை" என்றான் ஸொலமன். "எமக்குத் தேவையெல்லாம் அங்கீகாரம்! பி.எல்.ஓ. போன்று எம்மையும் அங்கீகரியுங்கள்... எமது சுதந்திரத்தை மீட்க எங்களுக்குத் தெரியும்..."

அந்தக் கோபமான பெண் இப்போது தெரிந்தாள். மற்றொரு பெண் எழுதிக்கொண்டிருந்த பேனரின் அருகே கவனித்தபடி நின்றுகொண்டிருந்தாள். ஒருமுறை திரும்பி ஆனந்தின் கண்களை நேராக சந்தித்தாள். மறுபடி திரும்பிக் கொண்டாள்.

"உங்கள் இயக்கத்தில் பெண்கள் கூட இருக்கிறார்களா?"

"ஓமோம்! எல்லாம் குமர்பிள்ளைகள்... பாடசாலையில் படித்தோ, திருமணம் செய்தோ சீவிக்க வேண்டிய பிள்ளைகள் துப்பாக்கி எடுக்கும் நிலைக்கு வந்திருக்கிறார்கள். இதோ இந்தப் பிள்ளை... வினோ! இங்கை



"நான் புத்திசாலி அல்ல. ஆனால் புத்திசாலி மாதிரி நடிக்கத் தெரிந்தவன்!...நான் இப்போது போட்டுக் கொண்டிருக்கும் பாண்ட் ஷர்ட் எல்லாமே வியாபார ரீதியில் எடுக்கப்படும் படங்கள் மூலமாக எனக்குக் கிடைத்தவைதான். அதனால் அந்த மாதிரி படங்களை நான் குறை சொல்ல மாட்டேன்.. பிரபல பாடகர் பாலமுரளிகிருஷ்ணாவிடம் கர்நாடக இசை கற்றவன் நான் – அவருடைய விசிறி நான்."

(ஒரு பேட்டியில் கூறியவர் –கமலஹாசன்)

– அனிதா ராமச்சந்திரன்

---

வா!" என்றான் ஸொலமன்.

விநோ! அந்தப் பெண் திரும்பினாள். பிரகாசமான முகம்.

"என்ன ஸொலமன்?" என்று அருகில் வந்தாள்

ஸொலமன் ஆனந்தைப் பார்த்து, "இந்தப் பிள்ளையின் பெயர் விநோதினி! கொலேஜில் படித்துக் கொண்டிருந்தாள். நிலவேலியில் வீடு... இந்தப் பிள்ளையின் அண்ணன் அருளம்பலத்தை போலீஸில் பிடித்துப் போனார்கள்... பாவம்! அறியாத பிள்ளை!... கனநாட்களாய் பொடியனைக் காணோம். ஒரு நாளில் றோட் டோரமாய் அருளம்பலத்தின் பிரேதம் கிடக்குது... கழுத்தில் டயர் மாட்டி எரித்திருக்காங்கள்..."

வேறு ஒரு தாடிக்காரன் இடைமறித்து ஸொலமனிடம் என்னவோ சொல்ல, ஸொலமன் ஆனந்திடம், "ஸோரி... ஒரு முக்கிய அலுவல்... இந்தப் பிள்ளையிடம் கதையுங்கள். கொஞ்ச நேரத்திலை திரும்பி வாறன்..." என்று எழுந்து சென்றான்.

விநோதினி எதிரே அமர்ந்து கொண்டாள். அவள் கண்களில் கோபம் மிச்சமிருந்தது.

"மிஸ். வி ஆர் ஸாரி!" என்றான் கிருஷ்ணன். "நான் கொஞ்சம் டியூப்லைட்... காட்சியமைப்பு சரியாப் புரியாது சில சமயங்கள்ல..."

"பரவாயில்லை!" என்றாள். அவள் முகம் தெளிவாக இருந்தது. கண்கள் பளிச்சென்று திருத்தமாக பெரிய மீன்கள் போல் பளபளத்தது. மாநிற மென்றாலும் முரட்டுத்தனம் தோய்ந்த அழகுடன் இருந்தாள். காட்டன் சட்டைக் கையை முழங்கை அளவு மடித்து விட்டிருந்தாள். அலட்சியமான ஓவியம் போல் இருந்தாள்.

"நீங்க பத்திரிகைக்காரங்களா?" அவள் கேட்டாள்.

"ஆமாம். என் பேரு ஆனந்த். இலங்கை பற்றி பிரத்யேகமா நிறையக் கட்டுரைகள் எழுதறேன்... போன வாரம் கூட படிச்சிருப்பீங்க. பலாலி ராணுவ முகாம் பற்றி..."

"ஓ! நன்னாயிருந்தது!" என்றாள்.

"மிஸ்.விநோதினி! நீங்களும் இந்த இயக்கத்தில் மெம்பரா?"

"ஓமோம்! இயக்கத்தின் பிற அலுவல்களை செய்கிறன். பிரச்சாரக் குழுவில் இருக்கிறன்..."

"உங்களுக்கும் ஆயுதப் பயிற்சி கொடுக்கிறார்களா? பெண்களுக்குக் கூடவா?" என்றான் ஆனந்த், ஆச்சரியமாக.

"என் இப்பிடிக் கேக்கிறியள்? பெண பிள்ளை ஆயுதமெடுப்பது கேலியாயிருக்குதா? இஸ்ரேலிலும், லெபனானிலும் பெண்கள் ஆயுதப்படை இருப்பது தெரியாதா? ஆண்கள் செய்தால் பாராட்டு செய்வினை.. பெட்டைகள் செய்தால் பரிகாசம் செய்வினை.. கன நாட்களாய் உமக்கெல்லாம் இதுதானே வழமையாய்..."

ஆனந்த் பொறுமையாக, "மிஸ். விநோதினி! தயவு செய்து கோபப்படா

தீர்கள்.. நான் அந்த அர்த்தத்தில் சொல்லவில்லை... உங்கள் உணர்ச்சிகள் எனக்குப் புரிகிறது... உங்களுடைய பிரச்னைகளின் மேல் எங்களுக்கு நிச்சயம் அனுதாபம் இருக்கிறது..."

ஆனநத தன்னுடைய பையிலிருநது சில பேப்பர்களை எடுத்துக் காண்பித்தான். "இதைப் பிறகு படியுங்கள்... தமிழீழ விடுதலை இயக்கங்களைப் பற்றி என்னுடைய சில கருத்துக்கள்..."

அவள் வாங்கிக் கொண்டாள். இப்போது அவள் கண்கள் ஆனந்தின் கண்களை நேராக சந்தித்தன. விலகின.

"மிஸ்.விநோதினி! நீங்கள் ஆயுதம் எடுக்க தனிப்பட்ட முறையில் ஏதாவது காரணம் இருக்கிறதா? சமூக நிலவரங்களுக்காக ஆத்மார்த்தமாக வந்த விடுதலை உணாவா? அலலது சொந்தப் பழி வாங்கும் உணர்ச்சியா?

"இதைப்பற்றியெல்லாம் ஆராய எமக்கு நேரமில்லை. எமது தமிழ் மக்களை காடையர்களிடமிருந்து காப்பாற்றப் போராடும் சமயத்தில் 'பொலிட்டிக்கல் ரிஸர்ச்' செய்ய எமக்கு விருப்பமில்லை..."

"உங்கள் அண்ணனைப் போலீஸ் கொன்றதாக..."

விநோதினி வெறுமையான கண்களுடன், "ஒமோம். அருளம்பலத்தை பொலீஸ் பிடித்துப் போய் சித்திரவதை செய்து கொன்னாங்கள்... 'கொம்ப்ளைன்ட்' செய்த எங்கய்யாவை வீட்டில் புகுந்து காடையர்கள் அடிச்சு நொறுக்கினாங்கள்.. ஐயாவை வெளியிலை விறாந்தையில் தள்ளி, தனி

---

ஆசிரியருக்கு,

இள வயதின் சபலங்களை சுந்தரராமசாமியின் தொடர்பால் வென்ற பிறகு இனிமேல் சிறுபத்திரிகைகளிலே மட்டுமே எழுதுவது, அவற்றை மட்டுமே படிப்பது என்று உறுதியான தீர்மானம் எடுத்தேன். மூன்று வருடங்களாக அவ்விரதத்தை தொடர்ந்தும் வந்தேன்.

இப்போது (இவ்விதழ்) குங்குமத்தை நீண்ட இடைவெளிக்குப் பிறகு படிக்க நேர்ந்தபோது ஆச்சரியம் ஏற்பட்டது. அசோகமித்திரன், பஷீர், கு.ப.ரா. கதைகள் வெளியிட்டமைக்காக பாராட்டுகள். மொத்தத்தில், இதழில் பாதி நுட்பமான இலக்கியத்தரமான படைப்புகள். நிரம்பியுள்ளது. தமிழின் இன்றையச் சூழலில் ஒரு பெரும் பத்திரிகையை அசட்டுத்தனமே இல்லாமல் பிரசுரிக்க இயலாதுதான். இந்த அளவுக்கு வந்திருக்கும் மாற்றம் கூட எவ்வளவு பெரிய போராட்டத்தின் விளைவு– அதன் இழப்பு எவ்வளவு இருக்கும் – என்று அறிகிறேன். மீண்டும் என் மனமார்ந்த பாராட்டுகளை தெரிவித்துக் கொள்கிறேன். ஒரு குழுவாக, இயக்கமாக இந்த வேகம் செயற்பட வேண்டும் என்று விரும்புகிறேன். பிற மொழி இலக்கியக் கூட்டங்களில் தமிழிலக்கியம் கேவலமாய் பேசப்பட்ட காலம் இனியும் தொடரக் கூடாது. உலகத் தரமான படைப்புகளும் படைப்பாளிகளும் தமிழில் இருந்தனர், இருக்கின்றனர். அவர்களுக்கு முக்கியத்துவம் தருவதாய், அவர்களை பயில்வதாய் நம் கலாச்சார சூழலும் கல்வி நிறுவனங்களும் மாற வேண்டும். அதற்கு குங்குமமும் தன் பங்கு பணியை ஆற்ற வேண்டும்.

–ஜெயமோகன்

யளாய் இருந்த என்னை சீரழிச்சாங்கள்..."

ஆனந்த் நிமிர்ந்து பார்த்தான்.

"ஓம்! என்னைச் சீரழிச்சாங்கள்! எங்கய்யாவினால் எழுந்திருக்க முடியேலை... என் அம்மா தூக்கு மாட்டி செத்துப்போனாள். என் தங்கை பாவம், சின்னப்பிள்ளை, கலங்கிப் போய் வீட்டிலை இருக்கிறாள். இந்த நிலையில் எம்மால் எப்படி சீவிக்க முடியும்? நீர் இருந்தால் என்ன செய்வீர்?" என்றாள்.

கிருஷ்ணன், "புரியுதுங்க... துப்பாக்கி எடுக்கிறதைத் தவிர வேறு வழியில்லை. அறிக்கை விடறதெல்லாம் வேஸ்ட்டு" என்றான்.

"ஐயாம் ஸாரி மிஸ்.விநோதினி! எனக்கு ரொம்பக் கஷ்டமாயிருக்கு. உங்க வேதனை புரியுது..." என்றான் ஆனந்த்.

ஸொலமன் வந்தான். விநோதினி எழுந்து கொண்டாள்.

ஆனந்த் ஸொலமனிடம் மேலும் சில கேள்விகளைக் கேட்டான். தென் இலங்கையின் தோட்டத் தொழிலாளத் தமிழர்கள் பற்றி, இந்துமுஸ்லிம் தமிழர்கள் ஒற்றுமை பற்றி, புதுப்புதுப் போராளி இயக்கங்கள் தினமும் உருவாவதைப் பற்றி, அவைகளுக்கிடையே சாத்தியமாயிருக்கும் குரூப் சண்டைகள் பற்றி, இந்த இயக்கத்தின் பொலிட்டிக்கல் ஃபிலாஸஃபி பற்றி, இந்தியாவின் தலையீடு பற்றி...

ஆனந்த் கூர்மையாகவும் நுட்பமாகவும் கேள்விகளைக் கேட்பதை விநோதினி கவனித்தாள். அவன் முகத்தில் தீவிரமும், நிஜமான ஈடுபாடும் இருந்ததைப் பார்த்தாள். அவள் கைகளில் ஆனந்தின் கட்டுரை இருந்தது- "தமிழீழம்தான் இனி தீர்வா?"

ஸொலமன் தேத்தண்ணீர் வரவழைத்தான். காலியான கிளாஸ்களை விநோதினி எடுத்துச் செல்லக் குனிந்தபோது அவளுடைய கரிய விழிகள் ஆனந்தை நோக்கின.



"நானூறு மணிநேரம் தொடர்ந்து பேசி சாதனை செய்த பேச்சுமாளுக்கு இரண்டாவது பரிசும், அதை பொறுமையோடு கேட்டுக் கொண்டிருந்த அவர் கணவருக்கு முதல் பரிசும் அளிக்கிறோம்."

—எம். கீதா

மாறுதல் தெரிந்தது. கோபம் மறைந்து விட்டது புரிந்தது.

ஆனந்த் மறுபடியும் வருவதாகச் சொல்லி ஸொலமனிடம் விடை பெற்றான். விநோதினி கைகூப்பினாள். சிறிய மின்னல் கீற்றுப் போல் புன்னகை செய்தாள். அவள் விழிகளில் நட்பு தெரிந்தது.

"கிருஷ்ணா! தட் கேர்ள் இஸ் இம்ப்ரஸிவ்! ஐ லைக் ஹர்!" என்றான் ஆனந்த்.

"யா! என்ன பரிதாபமான அனுபவங்கள்! விமன் கொரில்லா... இங்க்லீஷ் படம் போல...."

"கிருஷ்ணா! அவளை எனக்குப் பிடிச்சிருக்கு!"

"ரெண்டாவது தடவை சொல்ற..."

"அவ முகம் கண்ணுலேயே நிக்குது..."

"அந்தப் பெட்டையின் ஷேர்ட்டில் இருந்த துப்பாக்கியை நீர் பார்த்தால் இப்பிடிக் கதைக்க மாட்டீங்கள்!" என்று கிருஷ்ணன் சிரித்தான்.

ஆனந்த் பதிலுக்கு சிரித்தான். "அவள் தமிழ் இனிமையாயிருக்கு."

சற்று மௌனமாக இருந்தபின், தெளிவாகச் சொன்னான் ஆனந்த்.

"கிருஷ்ணா! ஐ திங்க்... ஐ'ம் பிகினிங் டு லவ் ஹர்!"

கிருஷ்ணனுக்கு ஒன்றும் புரியவில்லை.

# இருஷ்ணாடாவின் இ



மறுநாள் மத்தியானம் ஆனந்திற்கு ஃபோன் வந்தது. ரிஸீவரின் குரல் ஆனந்த அதிர்ச்சி. வினோதினி!

"ஹலோ! மிஸ்டர் ஆனந்த் இருக்கிறாரா?"

"ஆனந்த்தான் பேசுகிறேன்..." என்றான்.

சில வினாடி அமைதி. எதையோ சொன்ன அமைதி.

"மிஸ்டர் ஆனந்த், உமது கட்டுரை நன்றாயிருந்தது. எல்லாள மன்னன் காலத்திய வரலாற்றிலையிருந்து ஆரம்பித்து நன்றாகப் பிரச்சனையை எழுதியிருக்கிறீர்... எழுத்திலை நல்ல உணர்ச்சியிருக்குது.... உமது பத்

திரிக்கையிலை இது தொடங்க:ப் போகுதா?" என்றாள்.

"ஆமாம் மிஸ். விநோதினி!"

"உமது கட்டுரையிலை இன்னும் அநேக செய்திகள் விட்டுப் போயிருக்குது... எம்மிடம் 'அம்னெஸ்டி இன்டர்நேஷனல் றிபோர்ட்' கோப்பி இருக்குது... 'பூசா கேம்ப்' பற்றிய மறைக்கப்பட்ட செய்திகளும் வைத்திருக்கிறம்... உமது கட்டுரைத் தொடருக்கு" அது உதவுமெண்டு நான் நினைக்கிறேன்...". என்றாள். ஓ. அவனை அழைக்கிறாளா?

"நிச்சயம்! நான் உங்களை சந்திக்கலாமா?"

"ஓம்" என்றாள்.

"எங்கே? எக்ஸிபிஷன் நடக்கும் இடத்திற்கே வந்துவிடட்டுமா?"

"வேண்டாம்... இங்கை இன்றைக்கு சில அரசியல்வாதிகள் விஜயம் செய்வார்கள் போலிருக்குது... எனக்கு யுனிவர்ஸிட்டியில் ஒரு வேலை இருக்குது... அதை முடித்த ...ா உங்களைச் சந்திக்கிறன்..."

"நிச்சயம்!" என்றான்.

"சரியாக மூன்று மணியளவிலை யுனிவர்ஸிட்டி வாசலிலை காத்திருங்கள்" என்று வைத்துவிட்டான்.

ஆனந்த் தன் மனதில் ஏதோ மாற்றத்தை உணர்ந்தான். இதைப் போன்ற உணர்ச்சி அவனுக்குப் புதிது. இதுநாள்வரை அவனுக்குக் காதலில் நம்பிக்கை இல்லை. அப்படியெனில் ,படபடவென்று இந்த இதயம் ஏன் அடித்துக் கொள்கிறது? மார்பை அடைப்பதைப் போன்ற இந்த விநோத உணர்ச்சி ஏன்?

அவள் முகம் எப்போதும் கண்களிலேயே நிற்கிறதே? அந்தக் கோபமான குரல் காதிலேயே ஒலித்துக் கொண்டிருக்கிறதே?

கிருஷ்ணன் தோளைத தட்டி "என்னடா? ஞானோதயம் பெற்ற முனிவர்மாதிரி நிக்கறே? லாட்டிரி ஏதாவது அடிச்சியா?"

"விநோதினி!" என்றான் ஆனந்த்.

"சரிதான். காதலா? அதுக்குள்ளேயேவா?"

"கிருஷ்ணா, விநோதினி ஃபோன் பண்ணினா. என்னை சந்திக்கணுமாம்..."

"எதுக்கு? அண்ணனும் அண்ணியும் நோக்கறதுக்கா? மைகாட், ஆனந்த்! உனக்கா ரொமான்ஸ்? என்னவோ ஜி.பி. ஷாவையெல்லாம் அடிக்கடி மேற்கோள் காட்டுவ?.... இப்ப என்னடான்னா தமிழ் சினிமா நாயகன் போல... உன் இலட்சியமெல்லாம் பூட்டகேஸா?"

"கிருஷ்ணா, ஐ கான்ட் ரெஸிஸ்ட் லவ்விங் ஹர்!"

"பரவாயில்லை. கொஞ்சம் வித்தியாசமான லவ்வுதான். ஜெர்னலிஸ்டுக்கும் மிலிட்டெண்ட் பொண்ணுக்கும்..... நவீன காவியம்!.. நீடூழி வாழ்ந்தா சரி. ஆல் த பெஸ்ட்!" என்றான்.

ஆனந்த் அரைமணி நேரம் முன்னாலேயே சென்று காத்திருந்தான். 'காத்திருத்தல்' பற்றிய நிறைய காதல் கவிதைகளைப் படித்திருக்கிறான். நிஜம் என்னவோ நன்றாகத்தான் இருக்கிறது. ஆனந்திற்கு அவனைப் பற்றியே ஆச்சர்யமாக இருந்தது.

விநோதினி வந்தாள். மணி மூன்றரை.

விநோதினி

அதே உடை. பாண்ட்டும் ஷர்ட்டும் அணிந்து, ஆபரணங்கள் ஏதுமின்றி, புறக்கணிக்கப்பட்ட கூந்தல் பறக்க, (காதில் வெறும் அலுமினிய வளையம் மட்டும்) ஆனந்தைப் பார்த்துச் சிரித்தாள். எளிமையான, இனிமையான முகம்.

"ஸோரி! கொஞ்சம் நேரமாயிட்டது. நீர் கனநேரமாய் காத்திருக்கீங்களா?"

"பரவாயில்லை!... மிஸ், விநோதினி! மத்தியானம் நான் சாப்பிடவில்லை... பீச் ரிஸார்ட்டில் ஏதாவது சாப்பிட்டபடிப் பேசலாமா?"

"சரி!" என்றாள்.

அவனுடன் இணைந்து நடக்கும் போது அவளுடைய கூந்தல் கடல் காற்றில் ஆனந்தின் தோளைத் தொட்டது.

விநோதினி நீலநிறக் கடலைப் பார்த்தபடி சொன்னாள். "நம்மிடை இருக்கும் வித்தியாசம் இந்தக் கடல் நீர்தான் இல்லையா?"

"ஆமாம். லெமூரியா காலத்துல எல்லாம் ஒண்ணாயிருந்ததாம்."

"இந்த உலகிலை எதுவுமே சும்மா இருப்பதில்லை. எல்லாமே மாறிக்கிட்டே இருக்குது..." என்றாள் விநோதினி.

"எக்ஸப்ட் த் வேர்ட் சேஞ்ச்" என்றான் ஆனந்த்.

விநோதினி ஆனந்தைப் பார்த்து, "மிஸ்டர் ஆனந்த். உங்களிடை ஒண்டு சொல்ல வேண்டும். தமிழ்நாட்டிற்கு நான் வந்தநாள்தொட்டு இதை அவதானித்து வருகிறன். உங்களிடை மக்கள் சுத்தமான தமிழைப் பேசுவதில்லை... இடையிடையே ஆங்கிலம் தலைநீட்டுது... அதை நீங்கள் நாகரீகமாய் நினைக்கிறீர் போலும்..."

"தவிர்க்க முடியாதுங்க.. பிரிட்டிஷ் ரூல் கடைசிவரைக்கும் பாஞ்[illegible]க்குது..." என்றான் ஆனந்த்.

ஆனந்த் மீல்ஸ் ஆர்டர் செய்தான். விநோதினி சம்பிரதாயத்திற்கும் மறுக்காதது அவனுக்கு மகிழ்ச்சியாக இருந்தது. இந்தப் பெண்ணிற்கும் மனதில் ஏதோ விந்தை நடந்திருக்கிறதா? என்னிடம் மனரீதியில் நெருங்குகிறாளா?



வெட்கப்படும் இந்த நடிகை யார்

43-ம் பக்கம் பார்க்க

"மிஸ். விநோதினி! தமிழ் நாட்டில் உங்க வாழ்க்கை எப்படி இருக்குது?" என்று கேட்டான்.

"எங்களைப் போன்ற போராளிக் குழுக்கள் பரவாயில்லை. கவண்மெற் அவ்வளவாய் கண்டு கொள்வதில்லை... ஆனால் அகதி முகாமில் இருக்கும் அப்பாவி மக்கள் பாடுதான் திண்டாட்டமாய் இருக்குது... நுளம்பு நுழையாத இடத்திலும் கொமிஷன் வியாபாரிகள் நுழைந்து விடுகிறார்கள்..." என்றாள் விநோதினி.

"இந்த மாத 'டைம்' பார்த்தீர்களா? தமிழ்நாட்டில் நிறைய இடங்களில் போராளிகள் டிரைனிங் காம்ப்புகள் இருப்பதாகச் செய்தி வந்திருக்குது..." என்றான் ஆனந்த்.

"ஒமாம். ஒரளவு அது உண்மைதான். ஆனால் நிலைமை இப்பிடியே இருக்குமெண்டு நாங்கள் நினைக்கவில்லை. திடீரென்று உங்களிடை ஆதரவு பறிபோகும்... எல்லாமே தற்காலிகம்தான்..."

ஆனந்தும் விநோதினியும் நிறை

யப் பேசினார்கள். ஈழத்தில் தனிப் பட்ட சில நபர்களின் கொடூர அனு பவங்களை விவரித்தாள். சிங்கள மக்களுக்கும் தமிழ் மக்களுக்கும் இடையே கண்ணுக்குத் தெரியாத திரை விழுந்து விட்டதாகவும் அதை நீக்குவது என்பது கடினமான காரி யம் என்றும் சொன்னாள். அப்பாவி சிங்கள மக்கள்மீது தவறில்லை, அர சியல் ஆதாயங்களுக்காக இன வாதத்தைத் தூண்டிவிடும் 'சாவ னிஸ்ட்' கட்சிகளே பிரச்னைகளுக்குக் காரணம் என்றாள். மருதானை மாநாட்டின் செல்வாவின் பேச்சி லிருந்து தொடங்கி கந்தளாயில் நடந்த படுகொலை வரை நிறைய செய்திகளை விவரித்தாள்.

ஆனந்த் மெதுவாகக் கேட்டான். "விநோ! உங்கள் வாழ்க்கை கடைசி வரைக்கும் இப்படியேதான் கழியப் போகிறதா?"

"இப்படியேயென்றால்?"

"அதாவது, போராட்டம், ஆயுதம், சண்டையென்று...."

விநோதினி வெறுமையாக, "ஓம்" என்றாள். "எமக்கு வேறு வழி தெரியலை. என்றாவது ஒருநாள் கரைச்சலிலை நான் சாகப் போவது எனக்கு நிச்சயமாயிட்ட சங்கதி!" என்றாள்.

ஆனந்த் நிமிர்ந்து அவள் கண் களையே பார்த்தான்.

"விநோ! ஐயாம் ஸாரி! வாழ்க்கை எவ்வளவு கஷ்டம் உங்களுக்கெல் லாம்?" என்றான்.

விநோதினி வெண்மையாக சிரித்து, "மிஸ்டர் ஆனந்த்! அடக்கு முறை எங்களிடை நாட்டில் வெளி யாலை தெரியுது. உமது நாட்டில் மறைமுகமாய் நடக்குது..." என்றாள்.

"ஆனாலும்... நிச்சயமற்ற உங்கள் வாழக்கைபோல்..."

"என்ன செய்யட்டும் ஆனந்த்? நானும் குமர்பிள்ளைதான். எனக்கும் கோலேஜில் படிக்கும் காலத்திலை அநேகக் கனவுகள் இருந்தது. ஒரு



வாசகர் அட்டை—5

*இந்த வார வாசகர் அட்டையில் இடம்பெறும் எஸ்.பத்மா, அண்ணா மலைப் பல்கலைக்கழக பொறியியல் மாணவி. சென்னைத் தொலைக் காட்சி இயக்குநராக இருந்த அகிலா சிவராமனின் மகள்.*

*வண்ணப்படம் எடுத்தவர்—*
*ஆ.பிரபாகர் (அண்ணாமலைப் பல்கலைக்கழக மாணவர்)*



ரீச்சர் ஆகவேண்டுமெண்டு, திருமணம் செய்து, குடும்பத்தில் நுழைந்து... ஆனால் நடைமுறை· சீவிதம் கொடுமையாகவல்லவா இருக்குது?... போன ஜூலை மாதத்தை என்னால் கடைசி மூச்சு வரை மறக்க முடியுமா? எங்கய் யாவை என் கண்முன்னே காடை யர்கள் அடிச்சு நொறுக்கினாங்களே, அதை மறக்க முடியுமா? மூன்று வெறி யர்கள் சேர்ந்து என்னைக் கதறக் கதறக் கற்பழிச்சாங்களே, அதை மறக்க முடியுமா? அருளம்பலத்தின் பிரேதம் மேலே விழுந்து என் அம்மா கதறியதை மறக்க முடியுமா? என் அம்மா தூக்குமாட்டி செத்துப் போனாளே..." விநோதினியின் கண் களில் நீர் துளிர்த்ததை ஆனந்த் பார்த்தான்.

ஆனந்த் ஆறுதலாக அவளுடைய கையைப் பற்றினான்.

"விநோ! இலங்கையில் உங்கள் அப்பாவையும் தங்கையையும் யார் பார்த்துக் கொள்கிறார்கள்?"

"எமது இயக்கம் அவதானித்துக் கொள்கிறது. ஜினதாஸா என்று பக்கத்து வீட்டிலை ஒரு நண்பர் இருக்கிறார்... சிங்களர்தான். ஆனால் நல்ல மனிதர்... அவரும் உதவியா யிருக்கிறார்..." விநோதினி பெருமூச்சு விட்டாள். வெளியே தெரியும் அமைதி யான கடலைப் பார்த்தாள். அவ ளுடைய எண்ணங்கள் விரைவாகப் பறந்து, கடல் கடந்து, தன்னுடைய குடும்பத்தை அன்பாகப் பார்ப்பதை ஆனந்தினால் புரிந்து கொள்ள முடிந்தது.

"விநோ! உங்களுடைய போராட் டத்தில் உங்களுக்கு முழு நம்பிக்கை இருக்கிறதா?" என்றான் ஆனந்த்.

"நீங்கள் கதைப்பது புரியலை..."

"என்னைப் பொறுத்தவரை உங்கள் இயக்கத்தின் ஆதார பொலிட்டிக்கல் ஃபிலாஸஃபி சரி யில்லை என்றே நினைக்கிறேன்.. திசை திரும்புவதற்கு நிறைய வாய்ப்புகள் இருக்கிறது... பாக் ஜலசந்தியைக் கடந்து வருவது வெறும் இலட்சியப் போராளிகள் மட்டும் தானா அல்லது ஹெராயினும், ஆயுதமும், எலக்ட்ரானிக் பொருட் களும் கூடவா என்பதுதான்.."

விநோதினி இடைமறித்து "உங்கள் கணிப்பு தவறு ஆனந்த்...!" என்றாள். "எங்களிடை இயக்கத்தின் பயிற்சி யையும் கொள்கை விளக்க வகுப்பு களுக்கும் நீர் வந்தால் இப்பிடிப்பட்ட எண்ணங்களை நீங்கள் வளர்க்க மாட்டீங்கள்..." சற்று நேரம் அமைதி நிலவியது. ஆனந்த் தயங்கியபடியே

கேட்டான்.

"விநோதினி!... உங்களிடம் ஒன்று சொல்லலாமா?"

"என்ன ஆனந்த்?"

"விநோ! நான் கொஞ்சம் அவசரக்காரன் என்று சொல்வார்கள். எனக்கு எந்த விஷயத்திலேயும் அவ்வளவாகப் பொறுமை கிடையாது... அதனால்... அதனால்..."

விநோதினி நிமிர்ந்து பார்த்தாள். அவளுடைய கடலான கண்கள் அலைபாய்ந்தன. எதையோ பொறுமையின்றி எதிர்பார்த்தன.

"விநோ!...விநோ!.."

"சொல்லுங்க ஆனந்த்!

ஆனந்த் அவளுடைய கைகளை இறுக்கப் பற்றி "விநோதினி! நான் உன்னை விரும்புகிறேன்!" என்று சொல்லிவிட்டான்.

விநோதினி உடனே கையை ஆனந்திடமிருந்து விலக்கிக் கொண்டாள். அவள் முகத்தில் தெரிவது நிச்சயம் அதிர்ச்சி இல்லை. அந்தக் கண்கள் பிரதிபலித்த உணர்ச்சியை ஆனந்தினால் புரிந்துகொள்ள முடியவில்லை.

"ஆனந்த்! என்ன கதைக்கறீங்கள்? என்றாள்.

ஆனந்த் மறுபடி, தீர்மானமாக, "விநோ! உன்னைத் திருமணம் செய்ய விரும்புகிறேன்" என்றான்.

விநோதினி வெறுமையாகச் சிரித்தாள்.

"திருமணம், குடும்பமெல்லாம் என்னைப் போன்ற ஆட்களுக்கெல்லாம் ஒத்து வராது.. நாங்கள் ஷெல்களுக்கிடையே சீவித்துக் கொண்டிருக்கிறம்.."

"உன் தங்கையையும், அப்பாவையும் இங்கே வரவழைத்துவிடலாம் விநோ! நல்ல டிரீட்மென்ட் கொடுக்கலாம்.."

"அதெல்லாம் நடைமுறைக்கு ஒத்து வராத கனவு!" என்றாள்.

"விநோ! உன் மனதைத் தொட்டுச்

---

# ?

## உங்களை சிந்திக்க வைக்கும்

அடுத்த் இதழ்
குங்குமம்

**மினி சிறுகதைச் சிறப்பிதழாக மலர்கிறது**

**பிரபல எழுத்தாளர்கள் எழுதிய ஏராள சின்னஞ்சிறு கதைகள் இடம்பெறுகின்றன.**

சொல்லு! உனக்கு நிம்மதியான குடும்ப வாழ்க்கையில் ஆசை யில்லையா?"

"ஆசை வேறு. இலட்சியம் வேறு. எங்களிடை மக்கள்; காடையர்களால் கொல்லப்படும் நேரத்திலை நான் மட்டும் சுயநலமாய் சீவிக்க முடியாது. என்ரை குடும்பத்தையே சீரழித்த காடையர்கள் நூறு பேரையாவது என்னிடை கையாலை கொன்றால் தான் என் ஆத்திரம் அடங்கும். அதுவரை என்னால் எந்த காரியத்தையும் நினைத்துப் பார்த்திட முடியாது..." என்றாள் விநோதினி.

அவளுடைய தீவிரத்தை பிரமிப் புடன் பார்த்தான் ஆனந்த்.

"புரிகிறது விநோ! உன்னுடைய பேச்சில் நியாயமிருக்கிறது. ஆனால் மறுபடியும் சொல்கிறேன். நான் உன்னை விரும்புகிறேன்" என்றான்.

ஆனந்த் மௌனமாக அவளிட மிருந்து சில காகிதங்களையும், ரிபோர்ட்டுகளையும் வாங்கிக் கொண்டான். "ஆனந்த்! நீங்கள் கோபமாயிருக்கீங்கள்!" என்றாள்.

ஆனந்த் எதுவும் பேசவில்லை அவளை நிமிர்ந்து, கூர்மையாகப் பார்த்து, "பை விநோதினி!" என்று விடை பெற்றான்.

விநோதினி நீண்ட நேரம் கடலையே பார்த்தபடி அமர்ந்திருந் தாள். அவள் மனதில் புயலடித்துக் கொண்டிருந்தது.

"என்னடா காதலியைப் பார்த் துட்டு வரியா? என்ன, முகம் பசலை நோய் வந்தாப்ல இருக்குது?"

"கிருஷ்ணா! ஷி இஸ் ரிலக்டன்ட்" என்றான்.

"ஸிம்பிள்! தாடி வளத்துடு, ஒரு வாரத்துக்கு! பொதுவா மக்கள் அதைத்தான் செய்வாங்க..."

"அவளால போராட்ட வாழ்க்கை யிலேர்ந்து பிரிஞ்சு வரமுடியாது போலிருக்கு..."

"டெஃபனட்லி! அதுக்கு ஒரே வழி, நீயும் மிலிட்டென்ட்டா மாறறதுதான். ரெண்டு பேரும் துப்பாக்கியை மாத்திண்டு காட்டுக்குள்ள கல்யாணம் பண்ணிக்கலாம். வெய்ட், விநோதினி யோட இயக்கம் கல்யாணத்தை அனுமதிக்குதா? அதை முதல்ல கவனிக்கணும்.."

"கிருஷ்ணா! உருப்படியா ஏதாவது யோசனை சொல்லு!" என்றான் ஆனந்த்.

"நானா? சரிதான். குட்டைய குழப்பறதுதானே என் வேலை. நமக்கு இதிலெல்லாம் அனுபவம் கிடையாது. ரத்தத்துல கடிதம் எழுத றாப்ல என்னென்னவோ செய் வாங்க, தமாஷா இருக்கும்... இல் லைன்னா ஒருத்தரை ஒருத்தர் தாஜ்மகாலைப் பாக்கறாப்ல பார்த்துக்கிட்டே வேர்க்கடலை திம் பாங்க. சாயங்காலம் பீச்லே போய் பாரு... காதலர்கள்!"

"கிருஷ்ணா! அவளை என்னால மறக்க முடியாது. ஒரு விஷயம் நிச்சயம். அவள் என்னோட காதலை மறுக்கலை..."

"புரியலை!"

"இயக்கத்துலேயிருந்து பிரிஞ்ச வரமுடியாதுன்னுதான் சொல்றா... மறைமுகமா என் காதலை ஏத்துக்க

றான்னுதான் நினைக்கிறேன்."

"அப்ப இன்னும் முயற்சி பண்ணு. திருவினையாகும்."

"அவ கடைசியா என்னைப் பார்த்த பார்வையில் எதுவோ செய்தி இருந்தது.."

"அப்படியா? நாளைக்குப் பேப்பர்ல செய்தியைப் போட்டுறலாமா? ஏய் என்னடா ஒரேடியா பெனாத்தற? இதுதான் காதலா? உங்கப்பாக்கிட்டே போய் முதல்ல சொல்லு.. துள்ளி விளையாடுவார்."

ஆனந்த் நேர்பார்வையாக, "விநோதினி!" என்றான்

"சரிதான் மஜ்னுன்னு பேர் மாத்திடலாம்!" என்றான் கிருஷ்ணன்.

"**ஸொ**லமன் உன்னிடை ஒரு விஷயம் கதைக்க வேண்டும்..." என்றாள் வினோதினி. பக்கத்தில் அமர்ந்தாள்.

"சொல் விநோ!" என்றான் ஸொலமன்.. எதையோ எழுதிக்கொண்டிருந்தவன். காகிதங்களை மூடி வைத்தான். நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டான்.

"ஸொலமன்.. அதை எப்படிச் சொல்வதெண்டு...

"என்ன விநோ? எதற்குத் தயங்குறீர்?"

"ஸொலமன்... என்னிடை மனத்திலை ஒரே குழப்பமாய் இருக்குது. நேற்றிலிருந்து..."

"அப்பிடி என்ன குழப்பம்? ஓ, வீட்டு ஞாபகமோ?"

"அதில்லை. இது வேறு விஷயம் ஸொலமன், என்னை ஒருவர்.. ஒருவர்..." வினோதினி தயங்கினாள்.

— தொடரும்

**அஞ்சறைப் பெட்டி**

**அடுத்த இதழில்**



கிருஷ்ணா டாவின்சி

# வினோதினி

**ஸொ**லமன் மென்மையாகப் புன்னகைத்து, "காதலிக்கிறாரா?" என்றான்.

விநோதினி தலைகுனிந்து கொண்டாள்.

"விநோ! யார் அந்த ஆள்?"

"அன்றைக்கு உன்னைப் பேட்டி எடுத்தாரே? மிஸ்டர் ஆனந்த்..."

"ஓ! நல்ல மனிதர்!" என்றான் ஸொலமன். சற்று மௌனத்திற்குப் பின் "விநோ! நம்மிடை அநேக இலட்சியங்கள் இருப்பதை நீர் மறந்துவிடக் கூடாது... அது போகட்டும்... நீரும் ஆனந்தை நேசிக்கிறீரா?"

விநோதினி ஒன்றும் பேசாமல் தலை குனிந்தாள்.

"புரிகிறது. இதுதான் விநோ. இலட்சியத்துக்கும் வாழ்க்கைக்கும் உள்ள இடைவெளி... போகட்டும். நீர் பெண்பிள்ளை. உமக்கு இதைப் போன்ற ஆசைகள் இருப்பதில் ஆச்சர்யமில்லை... தவறுமில்லை" என்றான் ஸொலமன்.

"இல்லை ஸொலமன், எங்கடைக் கூட்டாளிகளுக்காக எதை வேண்டுமானாலும் செய்கிறன்..." என்றாள்.

ஸொலமன் சுற்றும் முற்றும் பார்த்து, பின் குரலைத் தாழ்த்தினான். "நம்மிடை இயக்கம் திருமணத்தைத் தடை செய்திருக்கிறது தெரியுமா?"

"தெரியும்!"

"ஆனால் பெட்டைகளுக்கு மட்டும் விலக்கு அளிப்பார்கள் என நினைக்கிறன்.. விநோ! உன் ஆசை நியாயமானதுதான்... ஆனால் நமது இயக்கத்து தலைமையின் அனுமதியை நீர் பெற்றபிறகு எதையும் செய்துகொள்ளும்... இல்லையென்டால் அனாவசியப் பிரச்னைகள் வரும்... ஏனென்றால் நம் இயக்க ரகசியங்கள் அநேகம் உமக்குத் தெரியும்."

"ஸொலமன! எனக்கு வெட்கமாய் இருக்கிறது. போராளியான நான் இப்பிடியான குடும்ப வாழ்க்கையிலை அகப்படுகிறது எனக்கே பிடிக்கவில்லை... ஆனாலும்..."

"ஆனாலும் நீர் ஆனந்தை நேசிக்கிறீர்...?"

"ஓமாம்"

"எனக்குப் புரிகிறது விநோ. உன்னைப்போன்றுதான் நானும்... கதிரவேலியில் எனக்காக ஒரு பெட்டை காத்துக் கொண்டிருக்கிறாள்... எப்போதாவது அவளை நான் சந்திக்கறன்... ஆனால் வெறும் காதல்தான்... ஒரு நாளும் அவளை நான் திருமணம் செய்யப் போகிற



தில்லை... அதற்குள் நாமே செத்துப் போகலாம்... என்னைப் பொறுத்த மட்டில் இயக்கந்தான் முக்கியமாய் படுகிறது" என்றான் ஸொலமன்.

"ஸொலமன்! எனக்கு அவமான மாய்..."

"அதைப்பற்றியென்ன? பரவா யில்லை. விநோ! எமக்கு தமிழ் நாட்டிலை நிம்மதியான சீவிதம் கிடைத்தாலே போதும்... அங்கிடைக் கரைச்சலை நாங்கள் பார்த்துக் கொள்கிறம். நீர் வருந்தவேண் டாம்..."

சிவத்தம்பி பரபரப்பாக உள்ளே வந்தான். சொன்னான்.

"திரிகோணமலையை நோக்கி ஆமி வந்துக்கிட்டிருக்குதாம். செய்தி வந்திருக்குது. ஏற்கனவே நிலைமை மோசமாயிருக்குது. தலைவர் செய்தி அனுப்பியிருக்கிறார்... நாம் உடனே இலங்கை புறப்பட வேண்டும்..."

சொலமன் தீப்பற்றியது போல் எழுந்தான். விநோதியினியிடம், "விநோ! உமது பிரச்னையை பிறகு அவதானிக்கிறன். நீர் உதயாவின் வீட்டிலை இப்போது தங்கிக்கொள்ளும். உம்முடன் பிறகு கதைக்கிறன்.. சிவா! பாய்ண்ட்பெற்றோவில் நிலைமை எப்படியிருக்கிறது என்று அவதானிக்க வேண்டும். முதலிலை யோகநாதனை பார்த்து விடலாம்.." என்று புயல் போல் கிளம்பி, விடைபெறும்போது விநோதினியிடம், "பயப்படாதையும்!" என்று சொல்லி அவசரமாக சிரித்தான். வெளியேறினான்.

அவனைப் பார்ப்பது இதுதான் கடைசி முறை என்று விநோதினிக்குத் தெரியாது.

"ஆனந்த்! கை குட்றா! கங்க்ராட்ஸ்!" என்றான் கிருஷ்ணன்.

"எதுக்குடா?

"டட்டடாய்ங்... கிரேட் சஸ்பென்ஸ்!"

"கிருஷ்ணா! வெறுப்பேத்தாதே!"

"எனக்கெதுக்கு காதலர் சாபம்? சொல்லிடறேன். விநோதினி ஃபோன் பண்ணினா..." என்றான்.

ஆனந்த் நிமிர்ந்தான். அவன் இதயம் தந்தியடித்தது.

"உன்னைப் பார்க்கணுமாம். பேசணுமாம். விட்டுறுவேனா? நல்லாக் கேட்டேன்.. என்னம்மா பொண்ணு, உனக்காக ஆனந்த் ஃபில்டர் வில்ஸ் கூட அடிக்காம உருகறான்? நீ என்னடான்னா புறநானூறு தலைவி மாதிரி ஊடல் பண்ணிக்கிட்டுன்னு..."

"கிருஷ்ணா! நீ ஒரு மஹா போர்! எங்கே வரச் சொன்னா?"

"வேறெங்கே? மெரினாதான். சாயங்காலம் ஆறுமணிக்கு.."

"மை காட்! மணி இப்ப மூணு.."

"அடப்பாவி! இதுக்கு ஏன் உணர்ச்சிவசப்படற? முழுசா இன்னும் மூணு மணி நேரம் இருக்குது.."

"முட்டாள்! ஏதாவது பிரஸண்ட் செய்யவேண்டாமா?" என்றான் ஆனந்த்.

"அதுசரி. முதல் செலவா? லவ் இஸ் வெரி எக்ஸ்பென்ஸிவ்..."

"கிருஷ்ணா! என்ன பிரஸன்ட் செய்யலாம்?"

"புடவை? வேணாம். அம்மா பாண்ட் இல்லை போடறாங்க? .32 ரிவால்வர் வேணும்னா வாங்கிக் கொடுக்கலாம். இல்லைன்னா கைக்குண்டு!"

"கவிதைப் புத்தகம்?" என்றான் ஆனந்த், யோசித்தபடி.

"வேணாம். இந்தக் கவிஞர்களே போர். தற்பெருமை ஜாஸ்தி. ஐடியா! நேத்தைக்கு பாரிஸ்ல ஒரு வால் ஃபிட்டிங் போஸ்டர் பார்த்தேன். 'கன்ஸ் அண்ட் ரோஸஸ்' ஒரு துப்பாக்கியில ரோஜாப்பூ சொருகியிருக்குது. விநோதினி + காதல்... சரியான பரிசு!" என்றான் கிருஷ்ணன்.

"சொல்லாதே! வா ஓடலாம்!"

சாயங்காலம் மெரினாவின் சுகமான தென்றலில், மாலை மயக்கத்தில், ஓவியம் போன்ற விநோவிடம் ஆனந்த் அந்தப் பரிசைக் கொடுத்தபோது விநோதினி நெகிழ்ந்து போய் அழுதாள்.



"ஆபீஸில் நான் லவ் லெட்டர் டைப் பண்ணிக்கிட்டு இருக்கும் போது மானேஜர் வந்திட்டார்!"

"அய்யோ... என்ன செய்தார்?"

"உங்களுக்குத்தான். லெட்டர் டைப் பண்றேன்னு சொன்னேன் சந்தோஷமா போயிட்டார்!"

—கீழை.அ.கதிர்வேல்

# ஆண்மைக் குறைவு- செக்ஸ் வீக்னஸ்-வீரியமின்மை ஏன்?

12 வயது முதல் 26 வயது வரை படிப்பில் கவனம், தேகப்பயிற்சி- உடற்பயிற்சி- விளையாட்டில் ஈடுபாடு வைத்தும் வாலிபப் பருவத்தை காப்பாற்றியும் மனதை கண்டபடி அலைய விடாமலும், கெட்டவர்களின் தொடர்பு இல்லாமலும் உடல் நலத்தைப் பாதுகாத்தும் வர வேண்டுகிறோம்.



அறியாமையால் செய்யும் சுய இன்பம் (கரப்பழக்கம்) கெட்டவர்களின் தொடர்பு, மூத்த வயதுடைய பெண்களின் நட்பு, ஹோமோ- செக்ஸ் போன்ற தவறான பழக்கங்களைப் பழகி அதைவிட முடியாமை, வாலிபப் பருவத்தை வீணாக்கி, உடல் நலத்தை வீணாக்கி கொள்ளாதீர்கள்.

**இயற்கைக்கு மாறாக இன்பம் பெறுவது சிலகாலம்—அதனால் வேதனை அடைவது பல காலம்.**

உடலில் அதிக உஷ்ணம், கண் எரிச்சல், தூக்கமின்மை, ஞாபக மறதி பயம், நடுக்கம், மன குழப்பம், சந்தேக எண்ணங்கள், தூக்கத்திலும் சிறு நீரிலும் சக்தி வெளியாதல், முயற்சி செய்தும் முடியாமை, ஆண் உறுப்பு தளர்ந்தும், துவண்டும், சிறுத்துப் போதல், துரிதஸ்கலிதம், பசியின்மை, மலச்சிக்கல், கற்ப அணுக்கள் உற்பத்திக் குறைந்து குழந்தை பாக்கியம் இல்லாமை, திருமணமே செய்ய முடியாத நிலை, அவசரப்பட்டு திருமணம் செய்தும் பெருத்த ஏமாற்றம், மணமக்கள் ஒற்றுமை இல்லாமை, இல்லற சுகம் பெற இயலாமை. இப்படிப் பாதிக்கப்பட்டவர்களுக்கு சர்க்கரை வியாதி, இருதய பலஹீனம், மேல் மூச்சு, ஹைபிரசர், உடல் வலி, நடுத்தண்டு வலி, இருமல், க்ஷயம் போன்ற வியாதிகளும் ஏற்பட இடம் இருக்கிறது. ஆண்களின் தவறான நடத்தையால் பெண்களுக்கும் பல வியாதிகள் ஏற்பட வாய்ப்புண்டு. இதைப்படித்துப் பார்த்து எந்த தப்பான வழிகளிலும் உடம்பைக் கெடுத்துக்கொள்ளாமல் எச்சரிக்கையாக இருக்கும்படி பணிவுடன் கேட்டுக்கொள்கிறோம்.

குறிப்பு: இம்மாதிரி பாதிக்கப்பட்டவர்கள் அவசரத்திலோ, விரைவிலோ குணம் பெறலாமென்று, எவரை நம்பியும் ஏமாற வேண்டாம். அவரவர்கள் செய்த தவறு- வீணாக்கப்பட்ட உடலின் சக்தி, பாதிக்கப்பட்ட வருஷங்களைப் பொறுத்து நீடித்த சிகிச்சையில் மட்டுமே மறுவாழ்வு பெற முடியுமென்று நம்புங்கள். மீண்டும் பழைய நிலைக்கு வர தொடர்ந்து சிகிச்சை பெறுவதுதான் ஒரே வழி.

**நேரில் சிகிச்சையும் V.P.P. மூலமும் பெறலாம். * வசதியுள்ளவர்கள் நடுத்தர சிகிச்சை சில மாதங்கள் பெறலாம். * மித வசதியுள்ளவர்கள் நடுத்தர சிகிச்சை பல மாதங்கள் பெறலாம். *- வசதிக்குறைந்தவர்கள் மோகனாமிர்தம் லேகியத்தை (1 மாதம் ரூ. 200/-) தொடர்ந்து சாப்பிட்டு சக்தி பெறலாம்.**

| விசேஷ 1 மாத சிகிச்சை | | உயர்ந்த 1 மாத சிகிச்சை | | நடுத்தர 1 மாத சிகிச்சை | |
|---|---|---|---|---|---|
| ரூ. 1,500-00 | ரூ. 1,200 | ரூ. 1,000-00 | ரூ. 750-00 | ரூ. 500-00 | ரூ. 400-00 |

**எமது பிரசித்தி பெற்றப் S.S.P. மோகனாமிர்தம் (டானிக் லேகியம்) 1 மாதம் ரூ. 200-00. V.P.P. யில் பெறலாம்.**

ஹெட்டாபீஸ்: **சாய்ராம் சித்த வைத்தியசாலை S.S.P.**

108, வாட்டர் டேங்க் ரோடு, ராஜாராம் நகர், சேலம்-636 007. தமிழ்நாடு.

## நிர்வாண நிபந்தனை

"பல வருஷங்களுக்கு முன்பு சட்டம் படிப்பதற்காக நான் லண்டனுக்குப் போனேன். அங்கு பல் கலைக்கழக வளாகத்தில் ஒரு நீச்சல்குளம் (வெந்நீர்) இருந்தது. நான் ஒருநாள் அதில் குளிக்கப் போனேன். அதில் குளிப்பதற்கு அவர்கள் சொன்ன நிபந்தனை என்னை தூக்கி வாரிப் போட்டது. நிர்வாணமாகத்தான் அதில் குளிக்க வேண்டுமாம். நான் எவ்வளவோ கெஞ்சிப் பார்த்தும் அவர்கள் என்னை ஜட்டியோடு குளிக்க அனுமதிக்கவில்லை. குளிப்பவர்களுக்கு பால்வினை நோய் இருக்கிறதா என்று தெரிந்துகொள்ளத்தான் அந்த நிபந்தனையாம். நான் அங்கு குளிக்கவேயில்லை!"

– 'சண்டே'யில் குஷ்வந்த் சிங்.

–அனிதா ராமச்சந்திரன்



---

விநோதினியும், ஆனந்தும் தினமும் சந்தித்தார்கள். விநோ உதயாவின் வீட்டில் தங்கியிருந்தாள். உதயா கொழும்புவைச் சேர்ந்தவள். ஆனால் பணக்கார அகதி.

"விநோ! உதயா உன் ஃப்ரெண்டா?"

"ஓமோம். நல்ல பெண். விடுமுறைக்கு நீர்வேலியிலுள்ள உறவினர் வீட்டிற்கு வருவாள். அவள் அப்பா கொழும்பில் பெரிய கடை வைத்திருந்தார். கலவரத்தில் எல்லாம் அழிஞ்சு போச்சு.... குடும்பமே இந்தியாவிற்கு வந்துவிட்டது" என்றாள் விநோ.

ஆனந்திடம் பேசிக்கொண்டிருக்கும்போதே சிலநேரங்களில் தனிமையில் மூழ்கி விடுவாள் விநோதினி.

"விநோ! என்ன திடீர்னு மௌனமாயிட்ட?"

"ஒண்டுமில்லை... குற்றஉணர்ச்சியாயிருக்குது..."

"எதுக்கு?"

"எமது கூட்டாளிகள் அங்கைக் கரைச்சலில் போராடிக் கொண்டிருக்கையில் நான் இப்பிடி சுற்றித் திரிந்து கொண்டிருப்பதை நினைத்தால்... ஒரு வகையில் அவமானமாய்க்கிடக்கு..."

ஆனந்த் கோபம் வராமல் சொல்லுவான்.

"புரியுது விநோ... எல்லாவற்றையும் நீதான் தீர்மானிக்க வேண்டும். சில செய்திகளைப் படித்துப்பார். இன்டர்–க்ரூப் சண்டைகள் ஆரம்பித்து விட்டது. தமிழ்ப் போராளிகளே ஒருவரை ஒருவர் அடித்துக்கொள்கிறார்கள். 'ரீன் ஆஃப் டெர்ரர்' என்பதுபோல் ஈழ மக்களுக்கு இரண்டு பக்கமும் வன்முறை..."

"இல்லை ஆனந்த். இதையெல்லாம் தவிர்க்க முடியாது. எந்த நாட்டிலைதான் பலதரப்பட்ட குழுக்கள் இல்லை? எம்மிடை ஆயிரம் குறைபாடுகள் இருந்தாலும் எமது எழுச்சியை யாராலும் தடுத்திட முடியாது. ஆனந்த்! அந்த நாட்களை என்னால் மறக்கவே முடியாது... 'போராளிகளை அடக்க என்று சொல்லி ஊரடங்கு உத்தரவு போட்டார்கள்... பிரசவ நேரத்திற்கோ, உடம்பு சுகமில்லாட்டோ எம்மாலை வெளியாலை வரமுடியாது... எப்போதாவது உத்தரவை தளர்த்துவாங்கள். அப்படித்தான் ஒருநாள் கடைத் தெருவிலை நல்ல ஜனக்கூட்டம் இருக்குது... சின்னப்பொடியன்கள் ஓடியாடித் திரியறாங்கள். திடீரென்று வானத்திலை சிறீலங்கா விமானங்கள் பறக்குது... ஏரியல் பம்பார்ட்மண்ட்! குண்டுகளை வீசினார்கள்.... எங்கேயும் மரண ஓலம்... சின்னப்பொடி

யன்களெல்லாம் ரத்த வெள்ளத் திலை துடிக்கிறாங்கள்... வீடுகள் இடிஞ்சுபோய் கிடக்குது. எந்த நாட்டிலையும் இதைப்போன்று அநியாயம் நடந்ததில்லை.. தம் சொந்த மக்களின் மேலேயே குண்டு! வீசிய காடையர்களின் கொடுமை அந்தச் சம்பவத்தின் இடிபாடுகளி லிருந்துதான் எங்கடை இயக்கங்கள் பிறந்தன. இதைக் குற்றம் சொல் வோரை நாங்கள் மதிப்பதில்லை.

"பொதுமக்களின் சப்போர்ட்! அதுதான் முக்கியம். விநோ! உங்கள் இயக்கங்களுக்கெல்லாம் அது இருக் கிறதான்னு தெரியலை."

"ஆனந்த்! நீங்கள் ஒருமுறை ஈழம் வந்தால என்ன?"

"வந்திருக்கிறேன்... சில வருஷங் கள் முன்னால்..."

"இப்போ நிலைமை வேறு... உங் களைப்போன்ற ஜெர்னலிஸ்டு களுக்கு ஈழபூமி செய்திகளை வாரிக் கொடுக்கும்... நான்கூட அங்கை போகவேண்டும்... நம் திருமணத் திற்குத் தலைவரிடம் அனுமதி கேட்க வேண்டும்...."

"வேண்டாம் விநோ! நீ இங்கேயே தங்கிவிடு! அங்கே நிலைமை எப்படியோ? கடிதம் மூலம் அப்பா வையும், தங்கையையும் வரவழைத்து விடலாம்..."

"சே! அது நம்பிக்கைத் துரோகம் ஆனந்த்! இப்போதுகூட வெறும் அனுமதி வாங்கத்தான் போகிறன்... இயக்கத்திலிருந்து என்னைப் பிரித்துக்கொள்ள இல்லை... அது என்னாலை உயிருள்ளவரை முடியாத காரியம்..."

"நிச்சயம் விநோ! உனக்கு முழுச் சுதந்திரம் இருக்குது... நான் அதைத் தடுக்கவே மாட்டேன்!"

ஆனந்தின் பத்திரிகை வேலை களுக்கு விநோதினி நிறைய உதவி னாள். தமிழ்நாட்டில் ரகசியமாக நடைபெறும் 'டிரெய்னிங் காம்ப்' களுக்கு அழைத்துச்சென்றாள். 'பிரைவேட் டிரான்ஸ்மீட்டர்' கருவி மூலம் ஈழத்திலுள்ள தலைவருடன் ஒரு பேட்டிக்கு ஏற்பாடு செய்தாள். மிகவும் சூடான போர்க்களச் செய்திகளை புகைப்படங்களுடன் கொடுத்தாள்.

ஒருநாள் மாலை ஆனந்திடம் விநோதினி மெதுவாகச் சொன் னாள்.

"ஆனந்த்! நாளை நான் இலங்கை செல்கிறன்!"

ஆனந்த் திடுக்கிட்டான்.

"விநோ! நிஜமாகவா?"

"ஓமாம். வேதாரண்யத்திலிருந்து 'போட்'டில் போகிறோம்..."

"விநோ! எனக்குக் கவலையாக




"இன்னிக்கு நீங்க போக இருந்த ப்ளேனை துப்பாக்கி முனைல ஹைஜாக் பண்ண இருந்தவனை கையும் களவுமா பிடிச்சவர் இவர்தான்!"

"அப்படியா? Guகண்ட் தெய்வம் சார் நீங்க!"

—வெ.சீதாராமன்

இருக்கிறது..." என்றான் ஆனந்த்.

விநோதினி சிரித்தாள். "இதி லென்ன கவலை? 'பாயிண்ட் பெற்றோ' அங்கிருந்து மிகவும் சமீபம்தான்.. சில மணிநேரப் பயணம்..."

"இல்லை விநோ... எனக் கென்னவோ... இதோ பார்! நேரில் போய் நீசொல்லத்தான் வேண்டுமா? உன் ஆட்கள் மூலமாக கேட்கக் கூடாதா?"

"சே! அது தப்பு! எமது தலைவரைப்பற்றி உமக்குத் தெரியாது... நல்ல படிப்பாளி... நேரில் அனுமதி கேட்பதே முறை..."

"உன்னுடைய இயக்க ஆட்களுக்கு விஷயம் தெரியுமா?"

"தெரியாது. ஸொலமனைத் தவிர..."

"விநோ! நானும் வரட்டுமா?"

"அது முடியாது ஆனந்த். இப்போது நிலைமை சரியில்லை... அயலவங்களை அழைத்துச்செல்ல எங்கடை ஆட்கள் அனுமதிக்க மாட்டாங்கள்... சிறீலங்கா கோஸ்ட் கார்டுகள் ரோந்து சுற்றிக்கொண்டிருக்காங்கள்..."

"அப்பிடியென்றால் நீயும் போகாதே!"

"என்ன ஆனந்த் இது? விளையாட்டுப்பிள்ளைபோல்..."

"இல்லை விநோ! நீ போகாதே!"

"சும்மாயிருங்கள்! எனக்கு அங்கை சில வேலைகள் இருக்குது. வரும்பொழுது என் தங்கையை அழைத்து வரவேண்டும்... ஐயாவை என்ன செய்வதெண்டு தீர்மானிக்க வேண்டும்... அப்புறம்... அப்புறம்.."

"என்ன விநோ?"

"ஒன்றுமில்லை" என்றாள்.

"விநோ! எதையோ மறைக்கிறாய்..."

"சே! ஒன்றுமில்லை..."

"விநோ! நீ மறைப்பது எனக்குப் பிடிக்கவில்லை" என்றான்.

விநோ நிதானமாக, "என்னிடைக் கையாலை ஒரு பத்து சிங்களச் சிப்பாய்களையாவது கொல்ல வேண்டும்" என்றாள். அவள் முகம் இறுகியிருந்தது.

சற்று நேரம் அமைதி நிலவியது.

"விநோ! உன்னுடன் வேதாரண்யம் வரை வருகிறேன்" என்றான் ஆனந்த்.

"வேண்டாம் ஆனந்த். விஷயம் யாருக்கும் தெரிய வேண்டாம். எமது இயக்கத்து ஆட்களிலேயே சிலபேர் மீது எனக்கு சந்தேகம் இருக்குது..."

"இல்லை விநோ! உன் இயக்கத்து ஆட்கள் நிறையப்பேரை எனக்குப் பழக்கமாகிவிட்டது. சந்தேகப்பட மாட்டார்கள்..."

"ப்ளீஸ் ஆனந்த். எதற்காக இப்பிடித் துடிக்கிறீர்? நான் நீர்வேலிக்குப்போய் ஒரு சில நாட்களில் திரும்பி வந்துவிடுவேன்... நீர் கவலைப்பட வேண்டாம்..."

ஆனந்த் பெருமூச்சு விட்டான்.

அன்று இரவு நெடுநேரம் அவர்கள் நெருங்கி இருந்தார்கள். பின்னிரவில் விநோதினி விடைபெற்றாள்.

—தொடரும்

## நாகேஷின் அக்கறை!



'மௌனம் சம்மதம்' படப்பிடிப்பின்போது ஒரு எக்ஸ்டிரா ஆர்ட்டிஸ்ட் மரத்தில் கயிறு போட்டு தலைகீழாய் தொங்கும் காட்சி. ஆர்டிஸ்டிடம் எவ்வளவு தூரம் சொல்லிப் பார்த்தும் டைரக்டர் மதுவுக்கு திருப்தியாய் காட்சி அமையவில்லை. இதை அருகிலிருந்து கண்ட நாகேஷ், தன் உடம்பை கயிற்றால் கட்டி நிஜமாகவே தலைகீழாய் தொங்கி, இப்படி நடிக்கணும்பா என்று சொல்லிக் கொடுத்தார். இந்த வயதிலும் இவர் இப்படி செய்வதற்கு, அவர் காலையில் செய்யும் உடற்பயிற்சிதான் காரணமாம். இன்றைய இளம் நடிகர்கள் எத்தனை பேருக்கு இந்த அக்கறை வரும் என்று வியந்தோம்.

—பாலு

மறுநாள் மாலை கிருஷ்ணனும் ஆனந்தும் உதயாவின் வீட்டிற்குச் சென்றார்கள். உதயா பரிபூர்ண இந்தியப்பெண் போல் இருந்தாள். வர்வேற்றாள்.

ஆனந்த் பொறுமையின்றி, "விநோதினி போயாச்சா?" என்றான். அவன் மனம் எதையோ விரும்பியது.

"இன்று மதியம் புறப்பட்டுப் போனாள்... பாவம் அவள்! இந்த வயதில் என்ன கஷ்டங்கள்?"

"நீங்களும் ரெஃப்யூஜியா?" என்றான் கிருஷ்ணன்.

"ஆமாம். ஆனால் கொஞ்சம் சொத்து இருக்கும் ரெஃப்யூஜிஸ்... கொழும்பில் நாங்கள் ரொம்ப நன்றாக வாழ்ந்து கொண்டிருந்தோம்... ப்யூட்டிஃபுல் டேஸ்...ப்சு... எல்லாம் போச்சு!" என்றாள் உதயா.

பின் ஆனந்தைப் பார்த்து, "மிஸ்டர் ஆனந்த்! நீங்கள் விநோவை நேசிக்கிறீங்களா?" என்றாள்.

"என்னங்க இப்பிடிக் கேட்டுட்டீங்க? ரெண்டு பேரும் சேர்ந்து சுத்தாத இடமில்லை... ஒருத்தரை ஒருத்தர் பூஜை செய்யறாங்க..." என்றான் கிருஷ்ணன்.

உதயா பெருமூச்சு விட்டாள்.

"விநோ மறுபடி இந்தியா வருவாளா என்று சந்தேகமாய் இருக்கிறது" என்றாள் உதயா.

ஆனந்த் திடுக்கிட்டான்.

"என்ன சொல்றீங்க மிஸ்.உதயா?"

"விநோவின் மனதில் சில நாட்களாய் போராட்டம் நடக்கிறது. போனவாரம் கூட விஜயனுக்கும், அவளுக்கும் ஒரே வாக்குவாதம்!" என்றாள் உதயா.

"அது யாரு விஜயன்?"

"விநோ இருக்கும் இயக்கத்தில்தான் அவனும் இருக்கிறான். உங்கள் காதல் விவகாரம் அவனுக்கு

7



எப்படியோ தெரிந்திருக்கிறது... விநோவை நிறையத் திட்டினான்..."

"பாஸ்டர்ட்! அவன் யார் திட்டுவதற்கு...."

"கோபப்படாதீர்கள். அவன் திட்டியது பொறாமையால் இல்லை.... விநோ போராளி வாழ்க்கையிலிருந்து விலகிப்போவது அவனுக்குக் கோபத்தை ஏற்படுத்தியிருக்கிறது. "விநோ! நீ வித்தியாசமான பெண் என்று நினைத்தேன். கடைசியில் நீயும் இவ்வளவுதானா?" என்று ஆரம்பித்தான். விநோவிற்கும்



கோபம் வந்துவிட்டது. இரண்டு பேரும் காரசாரமாகப் பேசிக் கொண்டார்கள்... மிஸ்டர் ஆனந்த்! விநோ உங்களைத் தீவிரமாகக் காதலிக்கிறாள் என்பது மட்டும் நிச்சயம்!" என்றாள் உதயா.

ஆனந்திற்குத் தொண்டையை அடைத்தது. உதயா உள்ளே சென்று ஒரு டைரியை எடுத்துவந்தாள்.

"விநோ உங்களிடம் இதைக் கொடுக்கச் சொன்னாள். உள்ளே அவள் ஃபோட்டோ இருக்கிறது..." ஆனந்த் அதை வாங்கினான்.

வெள்ளைக் காகிதங்கள் நடுவே அவள் புகைப்படம் இருந்தது. விநோ அதில் அழகாக, எளிமையாகச் சிரித்தாள். அதன் பின்னால் விநோ எழுதியிருந்தாள்! "அன்பான, உங்கள் விநோ!" ஆனந்தின் கண்களில் கண்ணீர் திரண்டது.

மறுநாள் காலைச் செய்தித்தாள்களில் செய்திகள் தூள் பறந்தன. "நடுக்கடலில் இலங்கை அரசின் வெறியாட்டம்... படகில் சென்ற தமிழர்கள் மீது துப்பாக்கிச் சூடு..."

"கிருஷ்ணா! எனக்குப் பயமாயிருக்கு... விநோ ஒழுங்காய் போய்ச் சேர்ந்திருப்பாளா?" ஆனந்த் இவ்வளவு கவலையுடன் இருந்து கிருஷ்ணன் பார்த்ததில்லை.

"உனக்கு எப்படி ஆறுதல் சொல்றதுன்னு தெரியலை... டெய்லி வர்ற நியூஸ் ஒண்ணும் சரியில்லை..."

"ஷீ வாஸ் அடமெண்ட் கிருஷ்ணா! நான் சொன்னதைக் கேக்கலை..." என்றான் ஆனந்த்.

"ஆனந்த்! யு ஸீம் டு பி ஹிட்! ராத்திரி சாப்பிட்டியா?".

"ப்ச... அவள் ஒழுங்காய் போய்ச் சேர்ந்தாளான்னு முதல்ல தெரியணும்..."

"அதுக்கு லாஜிக்கலா யோசிக்கணும். யோசிக்க உடம்புல தெம்பு வேணும். வா, ஏதாவது சாப்பிடலாம் ஐயர் கடையில..."

"வேண்டாம் கிருஷ்ணா! எனக்கு சாப்பாடு இறங்காது..."

"பேசாதே! இதென்ன பைத்தியக்காரத்தனம்? கமான், ஏதாவது யோசிப்போம்... முதல்ல சாப்பிடலாம்..."

கிருஷ்ணன் வலுக்கட்டாயமாக சாப்பிட வைத்தான். சாப்பிடும்போது ஆனந்த் புலம்பினான்.

"அவ ரொம்பக் குழம்பியிருந்தா கிருஷ்ணா! தடுமாறிப் போயிருந்தா... உதயாகூட சொல்லலை, அவ திரும்பி வருவாளான்னு சந்தேகம்னு..."

"அவசரப்படாதே ஆனந்த்! வெய்ட் பண்ணுவோம்..."

நாட்கள் கடந்தன. வெறும் நாட்கள்.

உதயாவிடம் விசாரித்தார்கள். கடிதம் ஏதும் வரவில்லை என்றாள். இயக்கத்தின் அலுவலகத்தில் விசாரித்தால் ஒருவேளை தெரியலாம் என்றாள்.

"உதைபடுவாய்! பேசாமல் வா!" என்றான் கிருஷ்ணன்.

"இல்லை கிருஷ்ணா! அவங்க ஆஃபீஸ் தேனாம்பேட்டையில இருக்குது... ஒருமுறை பாத்திருக்கேன்.. போய் பார்த்துடலாம்..."

அதெல்லாம் அப்போ! ஸ்ட்ரீட் ஃபைட் ஒண்ணு நடந்ததுக்கப்புறம் போலீஸ் துப்புரவாக்கிட்டாங்க...



"குருவே எனக்கு ஒரே செக்ஸ் கனவுகளா வருது!"
"அதுக்குத்தான் சொன்னேன், என்னோட பூஜை ரூமிலே படுத்துத்தூங்காதேன்னு!"
—எம்.பூங்கோதை

"நம்ம பையன் கண்ல படாத இடத்துல இந்த லெட்டரை வை"
"அவனோட பாடப் புஸ்தகத்துக் குள்ளே வெச்சிடறேங்க!"

— எம்.பூங்கோதை





போராளிகளை காவல்துறை துல்லியமா கண்காணிக்குது..."

"ஒருமுறை போய்ப் பார்க்கலாம் வா!"

தேனாம்பேட்டையில் முன்பு அலுவலகம் இருந்த இடத்தில் ரியல் எஸ்டேட் இருந்தது. கருப்பாக ஒரு மாமா அமர்ந்திருந்தார்.

"சிலோனா? அங்கேயெல்லாம் லே–அவுட் போடலீங்களே?"

"போட முடியாதுங்க. தலைகீழத் தொங்க விட்ருவாங்க..."

"கிருஷ்ணா! வா போகலாம்!"

காவல் துறையில் விசாரித்தார்கள். "இந்த சிலோன்காரங்களோட பெரிய பேஜாருங்க. யாரு போராளிங்க, யாரு கடத்தல்காரங்கன்னே புரியமாட்டேங்குது. ஆயுதம் வேறு வைச்சிருக்காங்க... நீங்க என்ன பேரு சொன்னீங்க...? அடடா! ஒரு விஷயமும் தெரியலையே...."

"கிருஷ்ணா! விநோதினி என்னை மறந்துட்டா!" என்றான்.

"அவ்வளவுதான்! முடிஞ்சு போச்சு கதை. சமத்தா ஆகவேண்டியதைப் பாரு!"

"இல்லை... அவ உயிரோட இருக்காளான்னு முதல்ல தெரியணும்... அவளைப்பத்தி எனக்கு நல்லாத் தெரியும்.. அவளால என்னை மறக்க முடியாது. நிச்சயமா... " என்றான் ஆனந்த்.

"சரி, என்ன பண்ணணும்கறே?"

"கிருஷ்ணா! நான் சிலோன் போகப் போறேன்!"

"சீதை தேடிய ராமன்னு நினைப்பா? 'அடோ தமிழ்ப் பண்டி'ன்னு அடிவயித்துல சுட்டுருவாங்க.. உனக்குப் பைத்தியம் பிடிச்சிருக்குது..."

ஆனந்த் கிருஷ்ணனை உலுக்கினான். "கிருஷ்ணா! விநோவை உடனே நான் பார்த்தாகணும்... ஐ'ம் பர்னிங்..."

"ஸாரி! ஒண்ணும் பண்ணமுடியாது!"

"ஒரு ஐடியா!" என்றான் ஆனந்த்.

"என்னது?"

"ஒரு விளம்பரம் குடுப்போம் பத்திரிகையில... நம்மபத்திரிகையில. நான் எழுதற கட்டுரை முடிவிலே.. விநோ நிச்சயம் அதைப் படிப்பா! நம்ம பத்திரிகைதான் இலங்கையில நல்லாப் போகுதே..."

"ஃபோட்டோ கூடவா?"

"வேண்டாம். அது ரிஸ்க்..."

"சரி, வா! எடிட்டரைப் பார்ப்போம்!"

எடிட்டர் யோசித்தார்.

"என்னப்பா! புது காதல் கதையா இருக்குதே? பின்னால எதனாப் பிரச்னை வரப்போவுது..." என்றார்.

"ஒண்ணும் ஆகாது சார்! விளம்பரத்துக்கு பொதுவா சார்ஜ் பண்ற காசைக் கொடுத்திடலாம்..."

"அடக் காசில்லைப்பா... சரி, விளம்பரத்தைக் கொடுங்க... பார்ப்போம்!"

கண்ணாடியை சரிசெய்து கொண்டு படித்தார்.

"அன்பான விநோ!
எல்லாம் மறந்து விட்டதா?
துப்பாக்கியின் மலரே!
ஒரே ஒருமுறை...
மறுபடி .... உன்முகம்..
—ஆனந்த்"

"புதுக்கவிதை போல இருக்குது. போட்ருவோம். ஏதாவது கான்ட்ரவர்ஸி கிளம்பினாலும் விளம்பரம்தானே?"

எடிட்டர் சிரித்தது ஆனந்திற்கு எரிச்சலாக இருந்தது. ஆனந்தின் செய்தி இயந்திரங்களின் பிரசவத்தில் கட்டம் கட்டமாகப் பிறந்து, சேர்க்கப்பட்டு, 'பின்' செய்யப்பட்டு, மார்க்கெட்டில் நுழையத் தயாரானது.

மறுநாள் காலை கிருஷ்ணன் வீட்டிற்கு வந்தான். ஆனந்த் இரவு நீண்ட நேரம் விழித்திருந்ததால் தூங்கிக் கொண்டிருந்தான். அப்பா தான் இருந்தார்.

"வாப்பா கிருஷ்ணா! உக்காரு...! கிருஷ்ணா....! ஆனந்த் கொஞ்ச நாளாகவே ரொம்ப 'டல்'லா இருக்கானே.... சரியா சாப்பிட மாட்டேங்கிறான்... என்ன ஆச்சு அவனுக்கு?" என்றார் கவலையாக.

"பசலை நோய் சார்!"

அவர் புரியாமல் "என்னப்பா சொல்ற?"

"அஜீர்ணமாயிருக்கும்.... எங்கே அவன்? தூங்கறானா?"

"நீயாவது அவனுக்கு சொல்லக் கூடாதா? அவனுக்கு ஒரு கல்யாணத்தை மட்டும் பண்ணி வைச்சுட்டா..."

"கலைப்படாதீங்க, பொண்ணு தாரதேசம் போயிருக்குது, சண்டை போட.... சீக்கிரம் வந்திடும்..." என்றான்.

"என்னப்பா! நீ பேசறதே புரியலையே..."

"அப்படிப்பேசறதுதான் என் வழக்கம்..." கிருஷ்ணன் நேராக ஆனந்தை அடைந்து அவனை உலுக்கினான்.

"எழுந்திருடா! சோம்பேறி! அவனவன் பொண்டாட்டிக்கு முத்தம் குடுத்துட்டு ஆஃபீஸ் கிளம்பிண்டிருக்கான்... நீ என்னடான்னா தூங்கிண்டு... ஆனந்த்...! சீக்கிரம் கிளம்பு திருவையாறு போகணும்..."

ஆனந்த் புரியாமல், "என்னடா சொல்ற?" என்றான்.

"ஆராதனை நடக்குதில்லை. அதுக்கு வர்ற வி.ஐ.பி.ஐ 'அட்ராக்ட்' செய்ய ஒரு எக்ஸிபிஷன் நடக்குது. யாரு? உன் அருமை விநோவின் இயக்கம்..." என்றான் கிருஷ்ணன்.

ஆனந்த் உடனே எழுந்தான்.

"எங்கேப்பா கிளம்பறீங்க ரெண்டு பேரும்?" என்றார் அப்பா.

"திருவையாறு சார்! சமாதியைப் பார்த்துட்டு வரலாம்னு... காதார நாலு கீர்த்தனை கேட்டு ரொம்ப நாளாச்சு..." கிருஷ்ணன் அவரை நெருங்கி ரகசியமாக, "அதெல்லாம் ஒண்ணுமில்லை சார். உங்க மருமகளைப்பத்தி விசாரிக்கப் போறோம்" என்றான்.

அவர் எதுவும் புரியாமல் நின்றார்.

புயல் போல் கிளம்பினார்கள்.

சென்னையில் நடைபெற்ற அதேபோன்ற எக்ஸிபிஷன்தான். அதே பானர்கள். புகைப்படங்கள். ஆனால் மனிதர்கள் புதிதானவர்கள்.

"என்னடா? தெரிஞ்ச ஆளுங்க யாரையும் காணோம்? அவன் பேரு என்ன?... ஸொலமன்!"

திடீரென்று விநோதினி தென்படுவாள் என ஆனந்த் மிக விரும்பினான். கோபமான். இல்லை..

இந்த வார வாசகர்
அட்டைப்பட வரிசையில்
இடம் பெறுபவர்
செல்வி லதா, சென்னை வாசகி.

அழகிய இளம் பெண்கள்
யாரும் தங்களது வண்ணப்படத்தை
அனுப்பலாம். சிறந்த அழகியர் தேர்வு
செய்யப்பட்டு அட்டையில் தோன்றுவர்.
ஆண்டு முடிவில் யார் சிறந்த அழகி
என்பதை வாசகரே தேர்ந்தெடுப்பர்.
சிறந்த அழகியைத் தேர்ந்தெடுக்கும்
வாசகருக்கும் அழகிக்கும் அழகிய பரிசு
உண்டு.

திரையை விலக்கி உள்ளே நுழைந்தார்கள். மூன்று இளைஞர்கள் அமர்ந்து, பேசிக்கொண்டு, நிமிர்ந்தார்கள்.

"வணக்கம். என் பெயர் ஆனந்த். ஜெர்னலிஸ்ட். இங்கே ஒருத்தரைப் பார்க்கணும்..." என்றான்.

மூவரில் ஒருவன் எழுந்தான். வலிமையான இளைஞன் அவன். கண்கள் சிவப்பாக இருந்தன. பெரிய உதடுகள்.

"ஓ! விநோதினியா?" என்றான் அவன்.

"விஜயா! இது யாரெண்டு..."

அவன் நேராக வந்து ஆனந்தின் சட்டையைப் பிடித்தான். உக்கிரமாக இருந்தான்.

"மோடையா! இயக்கத்தலைப் புகுந்து குழப்பம் செய்கிறதெண்டு எத்தனை பேர் இப்பிடிக் கிளம்பியிருக்கீங்கள்? எங்கடை நாட்டுப் பெட்டைகளென்றால் இளப்பமாய் இருக்குதா? உம்மைப்போன்ற ஆட்களையெல்லாம் சும்மா விட்டால்...

ஆனந்தின் கன்னத்தில் கையை இறக்கும் முன்னால் மற்றொருவன் தடுத்து விலக்கினான். "விஜயா! என்ன இது? அனாவசியக் கரைச்சல்... இதோ பாருங்கள்.... உமக்கு என்ன வேண்டும்?"

"லுக்.... விநோ என்னைக் காதலிக்கிறாள்.... அவளைப் பற்றிய செய்திகள் எனக்குத் தெரிய வேண்டும்..." என்றான் ஆனந்த்.

"விநோ! இங்கை இல்லை..." என்றான் ஒருவன்.

"அவனிடை என்ன கதைக்கறீங்கள்.... நாயை அடித்து வெளியாலைத் துரத்தாமல்..." என்று விஜயன் திமிறினான்.

"ஆனந்த்! வா! போகலாம்!" என்று கிருஷ்ணன் இழுத்தான்.

ஆனந்த் கடைசியாக, "மிஸ்டர் ஸொலமன் எங்கே?" என்றான்.

விஜயன் சத்தமாக, "ஸொலமனும், விநோவும் செத்துப்போய்ட்டாங்கள்.... போங்கடா வெளியாலை!" என்று கத்தினான்.

# அமெரிக்காவில் சோழராணி!

**1596** அடிகள் கொண்ட "அருட் பெருஞ்சோதி" என்கிற அகவல் பாட்டு நூல் வடலூர் இராமலிங்க அடிகளாரால் ஒரே இரவில் எழுதப்பட்டதாகும்!

**கா**வேரிப்பாக்கம் ஏரிக்கரையில் ஒரு மீட்டர் உயரமுடைய மகேசுவரியின் அழகான சிற்பமொன்று வைக்கப்பட்டுள்ளது. இதனைக் கிராம மக்கள் "வண்ணாத்தியம்மன்" எனப் பெயரிட்டு அழைக்கிறார்கள்!

**தா**ராசுரம் வீரபத்திரர் கோயிலில் ஒட்டக்கூத்தரின் சமாதி பாழடைந்த நிலையில் உள்ளது.

**கு**டந்தை கும்பேசுரர் ஆலயத்தைப் புதுப்பிக்கும்பொழுது கல்லால் ஆன இரண்டு நாதசுரங்கள் கண்டு பிடிக்கப்பட்டு அது தற்போது அந்தக் கோயிலில் உள்ளது..

**இ**ரண்டாம் புலிகேசியை வென்ற முதலாம் நரசிம்ம பல்லவன், வாதாபியிலிருந்து கொண்டுவந்த பிள்ளையார் ஒன்று குடந்தை நாகேசுவரன்கோயிலில் உள்ளதாம். அதனைக் கங்கைப் பிள்ளையார் என அழைக்கிறார்கள்.

**அ**மெரிக்க வாஷிங்டன் நகரத்துட பீரியர் கலைக்கூடமொன்றில் ஒரு தமிழ்நாட்டுச் சோழ ராணியின் வெண்கலச் சிலை உள்ளது. அது ராஜராஜசோழனுடைய பெரிய பாட்டி "செம்பியன்மாதேவியின்" படிமம் என ஆராய்ச்சியாளர் ஆனந்த குமாரசாமி அறிவித்துள்ளார்!

"புல்லாங்குழல்" என்ற கவிதை நூல் எழுதி லட்சம் ரூபாய் பரிசு வாங்கிய மலையாள எழுத்தாளர் சி.சங்கரகுருப் ஒன்பதாவது வரை படித்தவர்!

—தொகுப்பு கரூர் பொன்னுசாமி

"என்னடா இது? திருவிளையாடல் தருமிமாதிரி துரத்தி அடிக்கிறாங்க. சும்மாவிடலாமா? ஒரு கம்ப்ளைண்ட் லாட்ஜ் பண்ணிடலாம். வி ஷூட் கிவ் தெம் ஸம் டிரபிள்..." என்றான் கிருஷ்ணன்.

ஆனந்த் பிரமை பிடித்ததுபோல் இருந்தான்.

"கிருஷ்ணா! அவன் என்ன சொன்னான்? விநோ செத்துப் போய்ட்டாள்னு..."

"சே! ஹி இஸ் ஜெலஸ். அவனுக்கும் விநோதினிமேல ஒரு கண்ணுன்னு நினைக்கிறேன். உன்னை வெறுப்பேத்த அப்பிடி சொல்லியிருக்கான்..."

"அப்படியிருக்குமா?"

"அப்படித்தான்.. ஏண்டா, காதல் வயப்பட்டா அறிவு மங்கிடுமா?"

கொஞ்சநேரம் ஆராதனை விழாவில் நின்றார்கள். மனம் ஒட்டவில்லை.

யாரோ ஒருவன் ஆனந்தின் தோளைத் தொட்டான்.

ஆனந்த் திரும்பினான். யாழ்ப்பாண முகம்.

எக்ஸ்பிஷனில் பார்த்த மூவரில் ஒருவன்.

"வணக்கம். என் பெயர் கனகசபை. உங்களிடை ஒண்டு சொல்ல வேண்டும். விஜயன் அப்பிடி நடந்து கொண்டதற்கு நான் மன்னிப்பு கேட்கிறன் முதலிலை..." என்றான் அவன்.

"பரவாயில்லைங்க... அந்த 'ஆளு கொஞ்சம் மென்டல்னு பார்த்தாலே தெரியுது!" என்றான் கிருஷ்ணன்.

அவன் சிரிக்காமல், "மிஸ்டர் ஆனந்த்! விநோதினி 'பொயிண்ட் பெற்றோ' போய்ச் சேர்ந்துவிட்டாள்" என்றான்.

ஆனந்தின் மனதில் எதுவோ சட்டென்று விலகியது.

கனகசபை தொடர்ந்தான். 'அவளோடை சென்ற குழுவிலை நானும் போயிருந்தன். உங்களிடைக் காதல் எனக்குத் தெரியும்... விநோ சொல்லியிருக்கிறாள்..."

"விநோ மறுபடி வருவதுபற்றி ஏதாவது சொன்னாளா?"

"இல்லை. அதன்பிறகு அவளை நான் சந்திக்கவில்லை. வவுனியாவில் இருப்பதாய் தகவல்... அங்கே நிலைமை கன மோசம்..."

"அவள் இறந்துவிட்டதாக விஜயன் சொன்னது..."

"பாதி பொய்! விநோவிற்கு ஒன்றுமில்லை... ஆனால் ஸொலமன்! பாவம்! 'கன் பேட்டலில்' செத்துப் போனான்!" என்றான் கனகசபை.

ஆனந்திற்கு ஸொலமனின் இளமையான முகம் நினைவில் வந்து போயிற்று. அவன் குரல் காதில் ஒலித்தது.

"ஹாட்ல் ஆஃப்!" என்றான் கிருஷ்ணா.

"சரி, நான் வருகிறன்...," என்று சொல்லி கனகசபை விருட்டென்று விலகிப் போனான்.

"பாவம்டா ஸொலமன்! தொண்டையை அடைக்குது" என்றான் கிருஷ்ணன்....

—தொடரும்





"ஜவுளிக் கடைக்குள்ளார ஜனங்க புகுந்து துணிங்களை அள்ளிக்கிட்டு போறாங்களே, ஏன்?"

"தள்ளுபடி வியாபாரம் என்பதற்கு பதில் அள்ளுபடி வியாபாரம்னு தவறுதலா போர்டு எழுதிப் போட்டுட்டாங்களாம்!"

—எஸ்.புவனா

# விநோதினி

உதயாவிடம் வாங்கிய விநோதினியின் அட்ரஸிற்கு ஆனந்த் தினம் ஒரு கடிதம் எழுதினான். பதிலில்லை. நாட்கள் கடந்தன. ஒன்று, இரண்டு, மூன்று..

ஒரு நாள் கடிதம் வந்தது. ஆனந்திற்கு அதைப் பார்க்கையில் கண்களில் நீர் துளிர்த்தது.

பொறுமையின்றிப் பிரித்தான்.

அது ஒரு நீண்ட கடிதம். ஆனந்திற்குப் பெரிய அதிர்ச்சியைத் தந்த கடிதம்.

'அன்பான என் ஆனந்த்,

நீர் தொடர்ந்து எமக்கு அனுப்பி வைத்த கடிதங்களுக்கு நான் பதில் போடாததற்குக் காரணங்கள் இருக்கிறது. உமது பத்திரிகையில் உம்முடைய செய்தியைப் படித்த பின்னால் மனம் கேளாமல் இதை எழுதுகிறேன்.

ஆனந்த்! நீங்கள் என்னை மறந்துவிடத்தான் வேண்டும்.

என் நிலையும் அதுதான்.

இங்கே நிலைமை மிகவும் மோசமாயிருக்கிறது. ஆர்மிக்கும், எங்கடை இயக்கங்களுக்கும் இடையேயான கரைச்சல் வலுப்பெற்றிருக்கிறது. தினமும் கரைச்சல்தான்.

நான் எங்கடைக் கூட்டாளிகளுடன் வவுனியாக் காட்டில் பதுங்கியிருக்கிறேன். 'ஏரியல் பாமிங்' அடிக்கடி நடக்குது. எப்போதும், சுற்றிலும் ஷெல்களின் சப்தம்.

முதலில் எமது தலைவரிடம் நம் காதலுக்கு அனுமதி பெறத்தான் சந்தித்தேன். ஆனால் அவருடன் நான் கதைத்ததில் எனக்கு அநேக உண்மைகள் தெரிந்தது. எமது நாட்டு சுதந்திரத்தை வென்றெடுக்க வேண்டிய நிலையிலுள்ள நாங்கள் இப்பிடியான காதல் விவகாரங்களில் ஈடுபடுவது எந்த அளவிற்கு நியாயமில்லாதது என்பதை எனக்கு எம் தலைவர் புரிய வைத்தார்.

நான் இங்கே வந்த ஒருசில நாட்களிலேயே அநேகக் கொடுமைகளை நேராகக் கண்டுவிட்டேன்.

புத்தர் ஞானோதயம் பெற்ற போயா தினப் பண்டிகையில் புத்த குருமார்களின் ஆசி பெற்ற ஆயுதங்களுடன் சிங்களக் காடையர் எமது தமிழ்ப் பகுதியில் அநியாயப் படுகொலைகள் செய்திருக்கிறார்கள்.

பனாக்கடை முகாமில் ஒன்றுமறியா அப்பாவிப் பொடியன்கள் சித்திரவதை அனுபவிக்கிறார்கள். அநேகம்பேர் அங்கேயே கொல்லவும் படுகிறார்கள்.

யாழ்ப்பாண பொது மருத்துவமனையில் உள்ளே நுழைந்து நோயாளிகளையும், தமிழ் டொக்டர்களையும் வெட்டிப் படுகொலை செய்திருக்கிறார்கள்.

சிறிபுறாவில் மறுபடி குண்டுத் தாக்குதல் நடைபெற்றிருக்கிறது. தமிழ்நூலகத்தைக் கொளுத்தி லட்சம் புத்தகங்களைக் கொளுத்தியிருக்கிறார்கள்.

உங்களுக்கு அறிமுகமான ஸொலமன் சில நாட்கள் முன்னால் சாவகச்சேரியில் நடந்த துப்பாக்கிச் சண்டையில் களப்பலியாகிவிட்டான்.

இப்பிடியான இனக் கொடுமைகளையும், படுகொலைகளையும் நிறைய அடுக்கலாம். ஆனால் அவற்றையெல்லாம் செய்தித்தாள் மூலமாகவே நீர் அறிந்திருப்பீர்.

ஆனந்த்! தயவுசெய்து புரிந்து கொள்ளுங்கள்.

இந்த சமயத்தில் என்னால் மனசாட்சியை அடகு வைக்க முடியாது. போராட வேண்டிய நேரத்தில் போராடித்தான் தீர வேண்டும். அது என் கடமை.

ஆகவே, ஆனந்த்!

என்னை மறந்து விடுவதே நல்ல காரியம்!

நிலவரத்தின் கட்டாயத்திற்காகத் தான் இதை நாம் செய்ய வேண்டும்.

இங்கே அமைதியான வாழ்க்கை சாத்தியமாக இருந்தால் என் முடிவு வேறு மாதிரியாக இருந்திருக்கும்.

ஆனந்த்! நம்மைக் கடல் பிரிக்கிறது.



நாளை என்பது நிச்சயமில்லாத நிலையில் எந்தவிதமான கனவையும் காண நான் விரும்பவில்லை.

ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். உங்களை நான் அன்பாக நேசிக்கிறேன்.

என்னுடைய ஷேர்ட் பொக்கெட்டில் உங்கள் புகைப்படம் இருக்கிறது. உங்கள் நினைவு மனதில் இருக்கிறது.



அந்த நாட்களை என்னால் என்றும் மறக்க முடியாது. நிச்சயம் முடியாது.

ஆனந்த்! வேறென்ன சொல்வது? இனிக் கடிதம் எதுவும் எழுத வேண்டாம்.

அன்பு முத்தங்களுடன்,
உங்கள் விநோ.'

ஆனந்த் தலையைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்தான். நோ! விநோவை 'ப்ரெய்ன் வாஷ்' செய்திருக்கிறார்கள். இந்தக் கடிதம் பொய். விநோவால் என்னைப் புறக்கணிக்க முடியாது. நிச்சயம் முடியாது அவளுக்கு என்னவோ ஆகிவிட்டது.

ஆனந்த் உடனே கிருஷ்ணனை வரவழைத்தான்.

கிருஷ்ணன் கடிதத்தைப் படித்து, "என்னடாது! திடீர்னு கட்சி மாறிட்டாங்க?... 'ஐடியலாஜிக்கல்' எதுகேஷன்னு சொல்வாங்க... இது தானா?"



"நம்ப ரெண்டு பேரும் அடுத்த வாரம் வீட்டை விட்டு ஓடப்போற விஷயம் எங்கப்பாவுக்கு தெரிஞ்சு போச்சு."

"என்ன சொன்னாரு...?"

"எங்க அம்மாவோட தொந்தரவு தாங்க முடியலையாம். அவரும் நம்பளோட ஓடிவந்துடறாராம்."

— வி.சாரதி டேச்சு

"கிருஷ்ணா! நான் ஜாஃப்னா போகணும். ஏற்பாடு செய்!" என்றான் ஆனந்த்.

"கம் எகய்ன்?"

"ஜாஃப்னா! பாஸ்போர்ட், விசா எதுவும் வேண்டாம்... கள்ளத் தோணியில... தீர்மானிச்சுட்டேன்.. ஐ நீட் விநோ!.. நான் அவளைப் பார்த்தாகணும்... ஒரு முறை பார்த்தால் போதும்... வந்திடுவா... எனக்குத் தெரியும்..."

"ஆர் யூ சீரியஸ்? உன் முகத்தைப் பார்த்தா..."

"கிருஷ்ணா! தீர்மானிச்சாச்சு!" என்றான் ஆனந்த்.

"ஆனந்த்! நல்லா யோசிச்சுப் பார்த்தியா? இதுல எவ்வளவு ரிஸ்க் இருக்குது தெரியுமா?"

"தெரியும்."

"போனாத் திரும்பி வருவியாங்கறது சந்தேகம்.."

"வருவேன். விநோதினியோட!"

"இது சினிமா இல்லை. நிஜம்."

"கிருஷ்ணா! ஸ்டாப் ப்ரீச்சிங்!" என்றான் ஆனந்த்.

"ஓ.கே. ஒரு ரிபோர்ட்டிங் மாதிரி போய்ட்டுவா! ஆனால், நான் வரலை. எனக்கு உயிர் மேல் ஆசை இருக்குது..."

அன்று மாலை கிருஷ்ணன் திருவான்மியூரை அடுத்த கடற்கரை ஓர ஏதோ வீடுகளருகில் அழைத்துச் சென்றான். நிழலான சமாச்சாரங்கள் நடக்கும் இடம்போல் அரவமற்று இருந்தது.

"இங்கே நிறைய சிலோன் போராளிங்க தங்கியிருக்காங்க. கையில அட்ரஸ் இருக்குது... இது வேற போராளி க்ரூப்..."

வீட்டைக் கண்டுபிடித்தார்கள். கதவைத் தட்டினார்கள். திறந்ததும் உள்ளிருந்து மேற்கத்திய இசை மிதந்து வந்தது.

திறந்தவன் விருப்பமில்லாத முகத்துடன், "யார் நீங்க?" என்றான்.

அறிமுகம் செய்துகொண்டார்கள். உள்ளே அழைத்தான் அவன்.



# தமிழ்நாடு அரசு வழங்கும் திரைப்பட மானியங்கள்

## இந்த மானியங்கள் 1990-ஆம் ஆண்டில் குறைந்த செலவில் தயாரித்து வெளியிடப்படும் தரமான தமிழ் திரைப்படங்களின் தயாரிப்பாளர்களுக்கு வழங்கப்படும்

தமிழ் மொழியில் 3000 மீட்டர் நீளத்திற்கு குறைவில்லாமல் தயாரிக்கப்பட்டு மத்திய திரைப்பட தணிக்கைக் குழுவினரால் தணிக்கைச் சான்றளிக்கப்பட்டு 1.1.1990-லிருந்து 31.12.1990-ஆம் தேதிக்குள்ளான காலவரையறைக்குள் வெளியிடப்படும் 35 மி.மீ. முழு நீளத் திரைப்படங்கள் இந்த தேர்வுக்கு அனுமதிக்கப்படும். தமிழில் டப்பிங் செய்யப்பட்ட திரைப்படங்கள் இந்த தேர்வில் அனுமதிக்கப் படமாட்டாது.

2) குறைந்த செலவில் தயாரிக்கப்படும் படம் என்பது படத்தினைத் திரையிடப் பிரதிகள் எடுக்கும்போது ஒரு படத்திற்கு 12 முதல் 30 வரை வெளியீட்டுப் பிரதிகள் எடுக்கப்படும் படங்களாகும். எனவே 12 முதல் 20 வரை வெளியீட்டுப் பிரதிகள் எடுக்கப்பட்ட படங்களுக்கு ரூ.1,50,000/- (ரூபாய் ஒரு இலட்சத்து ஐம்பதாயிரம் மட்டும்) வீதமும், 21 முதல் 30 வரை வெளியீட்டுப் பிரதிகள் எடுக்கப்பட்ட படங்களுக்கு ரூ.1,00,000/-(ரூபாய் ஒரு இலட்சம் மட்டும்) வீதமும் அரசு மானியமாக வழங்கப்படும்.

3) ஆபாசமாகவோ, தரக்குறைவான-தாகவோ ஆட்சேபகரமாகவோ இல்லாத படங்கள் தரமான படங்கள் என கருதப்படும்.

மேற்படி தேர்வுகளில் பங்குகொள்ள விரும்பும் படத் தயாரிப்பாளர்கள் அதற்கென வரையறை செய்யப்பட்டுள்ள நுழைவு விண்ணப்பங்களை இயக்குநர், செய்தி-மக்கள் தொடர்புத் துறை, சென்னை-9 அவர்களிடமிருந்து பெற்றுக்கொள்ளலாம். பூர்த்தி செய்யப்பட்ட விண்ணப்பத்துடன் ரூ.100/- நுழைவு கட்டணம் சேர்த்து (நாட்டுடமையாக்கப்பட்ட வங்கியில் இயக்குநர், செய்தி-மக்கள் தொடர்புத் துறை, சென்னை-9 என்ற டிமாண்ட் டிராப்டாக எடுக்கப்பட்டது) மேற்கண்ட முகவரிக்கு அனுப்புதல் வேண்டும்.

இயக்குநர்,
செய்தி-மக்கள் தொடர்புத் துறை,
தமிழ்நாடு அரசு,
சென்னை - 9.



அவன் பெயர், "சர்வேசன்" என்றான். அமர்ந்தார்கள்.

"என்ன விஷயம்?" என்றான் அவன்.

"நான் யாழ்ப்பாணம் போகணும்" என்றான் ஆனந்த். இன்னும் இரண்டு பேர் அமர்ந்து கொண்டார்கள்.

"பத்திரிகை விஷயமாகவா?"

"ஆமாம்."

"அது மிகவும் 'ரிஸ்க்'கான விஷயம்..." என்றான் ஒருவன்.

"இப்போது இருக்கும் நிலைமையில் விசா கிடைக்காது போலிருக்கிறது.. அநாவசிய நேர விரயம். உங்களால் என்னைப் பாயின்ட் பெட்ரோ கொண்டு போய்ச் சேர்க்க முடியுமா?"

ஒருவன் எளிமையாகச் சிரித்தான். "அது எமக்கு சுலபமான காரியம்... ஆனால் நிலைமை மோசமாயிருக்குது... கோஸ்ட் கார்ட் படகுகள் வெறி பிடித்து திரியறாங்கள்... உங்களுடைய பாதுகாப்பிற்கு எம்மால் உறுதி அளிக்க முடியாது.."

"அதைப்பற்றி எனக்குக் கவலையில்லை" என்றான் ஆனந்த்.

"நல்ல துணிவு. பராட்டுகிறம். எத்தனை நாள் அங்கே தங்கியிருப்பீர்?"

"ஒரு சில நாட்கள்தான்..."

"திரும்பிக் கொண்டு வருவதும் உங்கள் பொறுப்பு!" என்றான் கிருஷ்ணன்.

"ஓமாம். காங்கேசன்துறையில் எமது ஆட்கள் இருக்கிறாங்கள்.... சுலபமாக 'கோன்டாக்ட்' செய்யலாம்..."

சற்று நேர அமைதிக்குப்பின்னால், "இரண்டாயிரம் ரூபாய் ஆகும்" என்றான் சர்வேசன்.

"கொடுக்கிறேன்" என்றான் ஆனந்த்.

"மறுபடியும் சொல்கிறோம். உங்கள் உயிருக்கு நாங்கள் பொறுப்பு அல்ல..."

"புரிகிறது."

"இது சட்ட விரோதமான காரியம் என்பதனை நீர் நினைவில் கொள்ள வேண்டும்..."

ஒருவன் கேட்டான். "மிஸ்டர் ஆனந்த்! எங்கடை நாட்டுப் போராளிகளைப் பற்றி உம்முடைய அபிப்ராயம் என்ன?" ஆனந்திற்குக் கேள்வியின் காரணம் புரிந்தது.

"நியாயமான போராட்டம்தான்" என்றான் ஆனந்த். சொல்லிவிட்டுக் கிருஷ்ணனைப் பார்த்தான்.

மேலும் சில பேச்சுகளுக்குப்பின் விடை பெற்றார்கள்.

"ஆனந்த்! உனக்கு உண்மையிலேயே துணிச்சல் ஜாஸ்தி... திரிகோணமலையில் நம்ம ஏஜண்ட் அட்ரஸ் இருக்குது... அங்கே தங்கிக்கோ!... ஜாக்கிரதை! இல்லீகல் ஸ்டே!.... உள்ளே தள்ளிவிடலாம்... நீ தமிழன் வேற..."

"தாங்க்யூ கிருஷ்ணா!... எல்லாத்தையும் நான் பாத்துக்கிறேன்..."

"தலைவிரிகோலமா எங்கே போறே...?"
"ஷாம்பூ கம்பெனியிலே வேலைக்கு இண்டர்வியூக்கு போறேன்."
— எஸ்.ராகவேந்திரா





"காசில்லாமே
சாப்பிட்டுட்டு
மாவாட்டாமே ஏன்
அந்த ஆளு தகராறு
பண்றாரு...."
"அவரு பெரிய இடத்து
ஆளாம். இட்லிக்கு,
தோசைக்கு அரைக்க
மாட்டேன். வேணும்னா
ஜாங்கிரிக்குதான்
அரைப்பேன்னு தகராறு
பண்றாரு.
– எஸ். ராகவேந்திரா

"அப்படியும் ஏதாவது பிரச்னைன்னா ஸில்வாவைக் கான்டாக்ட் பண்ணு... அவன் மூலம் ஹை கமிஷன் பிரஷ்ஷர்ல..."

"நீ ரொம்பப் பயப்படறே..."

"உன் அப்பாவுக்கு விஷயம் தெரியுமா?"

"பொய் சொல்லப்போறேன் கல்கத்தா போறதா..."

"ரைட். யார் கிட்டேயும் விஷயம் 'லீக்' ஆகக்கூடாது. எல்லாம் ரகசியமாகவே முடியணும்..."

கிருஷ்ணன் ஆனந்தின் தோளைத் தட்டினான்.

"ஐ அப்ரிஷியேட்! மனிதனுக்கு ஆதாரமா இன்னும் நேயம் மிச்சமிருக்குங்கறதுக்கு நீ ஒரு உதாரணம்... யு ஆர் ப்ரேவ்!... ஆனாலும் ஆனந்த்! ஜாக்கிரதை!"

மறுநாள் மதியம் ஆனந்திற்கு சர்வேசனிடமிருந்து ஃபோன் வந்தது... "மிஸ்டர் ஆனந்த்! நாளை மறுநாள் இரவு ஏழு மணிக்கு வேதாரண்யம் வந்து விடுங்கள்." ஒரு இடத்தைச் சொல்லி அங்கே காத்திருக்கச் சொன்னான்.

அன்று அமாவாசை. இருட்டான வானம். கடலலையின் ஓசை மட்டுமே கேட்டது. சற்றுத் தொலைவிலிருந்த பாயிண்ட் காலிமர் என்கிற இடத்திற்கு சர்வேசன் அழைத்துச் சென்றான்.

கடற்காற்று குளிராக வீசியது. கண்ணுக்கெட்டிய தூரம்வரை கடல். கடல். கடல். கருமையான கடல்.

மோட்டார் படகு காத்திருந்தது.

அதனுள்ளே நிறைய இளைஞர்கள் இருந்தனர். எல்லோரும் முதுகில் துப்பாக்கி அணிந்திருந்தார்கள்.

எல்லோரும் ஆனந்திடம் கை கொடுத்தார்கள். "மிஸ்டர் ஆனந்த். பயமொண்டும் வேண்டாம்... அதிகாலைக்குள் காங்கேசன் துறை சேர்ந்து விடலாம்..."

படகின் தரையில் பெரிய குழல் போன்ற ஆயுதங்கள் கிடந்தன. பெட்டிகளில் ஏவுகணை போன்ற குண்டுகள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன.

கிருஷ்ணன் ஆனந்திடம் விடை பெற்றான். அவன் கண்கள் கலங்கியது இருட்டில் சரியாகத் தெரியவில்லை.

"ஆனந்த்! ஜாக்கிரதை! கீப் ஹாவிங் டச் வித் மீ!" என்று விடை பெற்றான். கையசைத்தான்.

சில ஆயத்தங்களுக்குப்பின்னால் படகு கிளம்பியது. படகின் நான்கு புறங்களிலும் நான்கு இளைஞர்கள் துப்பாக்கியுடன் நின்றுகொண்டார்கள்.

இரண்டு பேர் சேர்ந்து அந்த நீளக் குழாயை படகின் நடுவில் பொருத்தினார்கள். அது சுழலும் விதத்தில் இருந்தது.

"என்ன அது?" என்றான் ஆனந்த்.

"பஸீக்கா லான்ச்சர்!" என்றான் ஒருவன்.

அதனருகில் அவன் தயாராக அமர்ந்துகொண்டான். அதன் வயிற்றில் குண்டுகள் பொருத்தப் பட்டன.

மோட்டார் படகின் சத்தம் அந்த அமைதியில் இரைச்சலாய் இருந்தது. ஆனந்தின் இதயம் துடித்தது. பாவம் விநோ! இப்பிடித்தானே அவளும் சென்றிருப்பாள்?

எல்லோரும் தங்களை அறி முகப்படுத்திக் கொண்டார்கள். ஆனந்தின் அருகில் ஒருவன் அமர்ந்தான். "என் பெயர் தனி நாயகம்" என்றான். படகு ஆடியபடி பயணித்தது.

ஆனந்த் அவர்களிடம் பேச்சுக் கொடுத்தான்.

"சீவிதம் எமக்கெல்லாம் நிரம்பக் கஷ்டம். நாங்களெல்லாம் முல்லைத் தீவிலை மீன் பிடிக்கிறவங்கள்... ஆர்மியின் வெறியாட்டத்திற்குப் பின்னாலை இப்பிடிப் போராளிகள் ஆகிவிட்டோம்.... எம்மிடை வாழ்க் கையின் பாதி நாள் இப்பிடிக் கடல் பயணத்திலேயே கரையுது..."

"எதற்காக இந்தப் பயணங்கள்?"

"தெரியாலையா? ஆயுதம்தான். சில நேரங்களிலை அகதிகளையும் ஏற்றி வருவோம்..."

படகு உற்சாகமாக முன்னேறிக் கொண்டிருந்தது. படகை ஓட்டியவர் களின் பார்வை அடிக்கடி வானத்தைப் பார்த்தது. நட்சத்திர நிலை வைத்து ஓட்டுகிறார்கள் போலும்.

நடுநிசி வரை பயணம் தடங்க லின்றித் தொடர்ந்தது.

திடீரென்று மூலையிலிருந்தவன் கத்தினான்.

"ஜீவா! மோட்டாரை நிறுத்து!"

கேள்வி கேட்காமல் மோட்டார் நிறுத்தப்பட்டது. நிசப்தம்.

"ஓமாம். சத்தம் கேக்குது" என் றான் தனிநாயகம். ஆனந்திற்கு ஒன்றுமே கேட்கவில்லை, இதயத்தின் துடிப்பைத் தவிர.

"ஆனந்த் தரையில் படுத்துக் கொள்ளும்!" என்று ஆனந்தை

"என் கணவா எளிமையை விரும்பும், ஆடம்பர வாழ்வை வெறுப்பவராக இருக்க வேண்டும். அவரிடம் நான் மிக முக்கியமாக எதிர்பார்ப்பது திருமணத்திற்குப் பின் எனது கடந்த கால சினிமா வாழ்க்கையைப்பற்றி எந்தக் கார ணத்திற்காகவும் அறிய முற்படக் கூடாது என்பதே. திருமணத்திற்குப் பின் நிச்சயமாக நான் சினிமாவில் நடிக்க மாட்டேன்" என்கிறார் ரேகா.

இழுத்து படகின் மூடிய பகுதியினுள் தள்ளினான் தனிநாயகம். "ஆனந்த்! தலை நீட்டாதீர்!"

"என்ன ஆச்சு?"

"கோஸ்ட் கார்டு போட் வருது..." என்றான்.

படகு தளும்பிக் கொண்டிருந்தது. நிசப்தமான சூழல். 'பஸீக்கா லான்ச்சரின்' விசையில் தயாராக இரண்டுபேர் இருந்தனர். ஓரங்களில் மறைந்துகொண்டு துப்பாக்கி களுடன் மற்றவர்கள் காத்திருந்தனர். நேரம் கடந்தது.

இப்போது ஆனந்திற்கு அந்த சத்தம் கேட்டது. மோர்ட்டார் சத்தம். மெதுவாகத் தலை தூக்கிப் பார்த்தான்.

கடலில் தூரே விளக்கு தெரிந்தது. மற்றுமொரு பெரிய விளக்கு எரிந்தது. சுழன்றது. வெளிச்சம் விசிறியது.

அந்தப் படகில் ஸ்பீக்கர் பொருத் தப்பட்டிருக்க வேண்டும். அதி லிருந்து குரல் எதிரொலித்தது. "அடோ! திரஸ்தவாதி!" சிங்களக் குரல்! ஆனந்த் சிலிர்த்தான்.

ஜீவா கத்தினான். "ஜோர்ஜ்! சுடு! சுடு!" தனிநாயகம் ஆனந்தின் தலையை உள்ளே அழுத்தினான். எழுந்து நின்றான். அவன் கையிலும் துப்பாக்கி!



பலீக்காவிலிருந்து குண்டுகள் சீறியது. படகு பயங்கரமாக ஆடியது.

"அடேய்! சிங்கள நாய் மகனே! செத்துப்போடா!"

குண்டுச் சத்தம் டப் டப்பென்று கடல் நீரில் எதிரொலித்தன. சில விநாடிகள் குண்டுப் பரிமாற்றங்கள்.

ஆனந்த் தலை தூக்கிப் பார்த்த நிமிடம் அவன் மேல் தனிநாயம் தொப்பென்று விழுந்தான். அவன் முகமெங்கும் ரத்தம் கொப்புளித்தது. வழிந்தது.

"ஐயோ! தனிநாயகம்!... என்ன?... என்னாச்சு?"

ஆச்சர்யமாக கோஸ்ட் கார்டு போட் திரும்பியது. தண்ணீரில் கன்னாபின்னாவென்று சுட்டு விட்டுப் பின்வாங்கியது. புறமுதுகிட்டது.

"போங்கடா கோழைப் பயல்களா!"

எல்லாம் சில நொடிகளில் நடந்து முடிந்தது. சிங்கள கோஸ்ட் கார்டு படகு இப்போது தெரியவில்லை.

எல்லோரும் தனிநாயகத்தை சூழ்ந்து கொண்டார்கள். ஆனந்தின் சட்டையெங்கும் ரத்தம் வழிந்தது.

"ப்சு! நாயகம் செத்துவிட்டான்!" என்றான் ஒருவன்.

ஆனந்த் ஸ்தம்பித்தான். என்ன பயங்கர அனுபவம். சற்று நேரத்திற்கு முன்னால் என்னுடன் உற்சாகமாகப் பேசிக்கொண்டு வந்தவன் கண் முன்னாலேயே செத்துப்போய் விட்டான்.

"குண்டு தலையிலை பாஞ்சிருக்குது!"

"பாவம்! இவ்னை நம்பி வீட்டிலை மூன்று பெட்டைகள் இருக்குது! ஒரு பொடியன் வேறு..."

ஆனந்த் அந்த இளைஞர்களை நெகிழ்ச்சியுடன் பார்த்தான். இரவில் அநேக மக்கள் நிம்மதியாக உறங்கிக் கொண்டிருக்க, இவர்களுக்கு மட்டும் ஏன் இந்த நிச்சயமற்ற, அநியாயமான வாழ்க்கை? இன்னும் எத்தனை நாட்கள்?

தனி நாயகத்தின் உடலை நடுவில் இழுத்து வைத்தார்கள். வெள்ளைத் துணியால் போர்த்தினார்கள்.

படகு மறுபடி பயணத்தைத் தொடர்ந்தது.

ஒருவன் ஆனந்தைத் தட்டி, "என்ன ஸேர்? பயந்துவிட்டீங்களா? எங்களுக்கு கன நாட்களாய் சகஜமாகிவிட்ட சங்கதி இது!" என்றான்.

ஆனந்தினால் எதுவும் பேச முடியவில்லை.

சூரியன் கிழக்கில் உதிப்பதற்கு சிறிதுநேரத்திற்கு முன்னாலேயே படகு காங்கேசன் துறையை அடைந்து விட்டது.

ஆனந்த் ஈழ மண்ணில் காலடி எடுத்து வைத்தான்.

சூழ்நிலையில் நிறைய வித்தியாசம் இருந்தது. மக்கள் நடமாட்டம் அதிகமாக இருக்கவில்லை. எல்லோரின் முகத்திலும் ஏதோ பயம் தெரிந்தது. ஏதோ கிராமப் பகுதி போல் இருந்தது. மீன் பிடிக்கும் மக்களின் பிரதேசம்.

தயாராக இருந்த போராளிகளின் வேனில் ஆனந்த் ஏறினான். வேன் சில மணி நேரத்தில் சாவகச் சேரியை அடைந்தது. பயணம் இன்னும் மிச்சமிருந்தது.

– தொடரும்

மறுநாள் மாலை போராளிகளின் உதவியுடன் ஆனந்த் திரிகோணமலை சென்றடைந்தான். இவன் சென்ற நேரத்தில ஊரடங்கு சட்டம் தளர்த்தப்பட்டிருந்தது.

ஆனந்தின் கூடவே போராளிக் குழுவைச் சேர்ந்த ரஹீம் என்பவனும் திரிகோணமலைவரை வந்தான். அங்கே அவனுக்கு வேறு வேலை இருந்தது.

பத்திரிகை ஏஜெண்ட் பொன்னம்பலத்திடம் ஆனந்தை சேர்ப்பித்துவிட்டு விடைபெற்றுக்கொண்டான். அவருக்கு மிகவும் ஆச்சரியம்.

"என்ன சொல்றீங்கள்? தோணியில வந்தீங்களா? நிலைமை கனமோசமாயல்லவா இருக்குது? இந்த நேரத்திலையா? வெளியாலைப் பாத்தீங்களா? ஆர்மி டிரக்குகள் திரிந்துகொண்டிருக்குது..."

"மிஸ்டர் பொன்னம்பலம்! ஒரு அவசர வேலையாக வந்தேன்."

"முதலில் சாப்பிடலாம். வாருங்கள். பிறகு கதைப்போம்!"

அன்றிரவு எல்லாவற்றையும் ஆனந்த் சொன்னான். பொன்னம்பலம் பிரமித்தார்.

"இதென்ன? கற்பனைக் கதையில வருகிறாப் போலல்லவா இருக்குது? நிலவேலி இங்கிருந்து பக்கந்தான். சுலபமாய் போய்விடலாம்... அத்தனை பயமில்லை. கவர்ண்மென்ற் கொஞ்சம் கொஞ்சமாய் துருப்புகளையெல்லாம் திருப்பிக்கொண்டிருக்குது... பொடியன்கள் நல்ல பதிலடி கொடுக்கிறாங்கள். சரி. நாளைக் காலை அங்கே போவோம்... என் நண்பரொருவர் அங்கிருக்கிறார்... ஆனால் உங்கள் விநோதினி வவுனியாவில் இருப்பதாயல்லவா கதைக்கிறீங்கள்..."

"இல்லை. விநோவின் வீட்டிற்கு






முதலில் போய்ப் பார்த்துவிடலாம் என்றான் ஆனந்த்.

மறுநாள் காலை திரிகோணமலையிலிருந்து கிளம்பி நிலவேலியை அடைந்தார்கள். பொன்னம்பலம் அவருடைய நண்பரை அறிமுகம் செய்து வைத்தார்.

"இவர் பெயர் அருணாசலம் ரீச்சர்."

ஆனந்தைப்பற்றி விவரித்தார் பொன்னம்பலம்.

அருணாசலம் உடனே ஆனந்தின் கைகளைப் பற்றிக்கொண்டார்.



# வி நோ தி னி

"உங்கள் துணிவு பாராட்டத் தக்கது" என்றார்.

அவர் வீட்டிற்கு கொஞ்ச தூரத்திலேயே விநோதினியின் வீடு இருந்தது. ஒருவிதத்தில் அதிர்ஷ்டம் தான்.

அருணாசலம் .சொன்னார்– "மிஸ்டர் ஆனந்த்! இப்போது நீங்கள் அங்கை செல்வது சரியில்லை. யாராவது கண்காணித்தால் ஆபத்து. நான் சென்று ஐயாவை விசாரிப்பதுபோல் பார்த்துவிட்டு வருகிறன். விநோவின் தங்கைக்கு . உங்களைப்பற்றித் தெரியுமா?

"தெரிந்திருக்க வேண்டும். ஏனென்றால் இந்த விலாசத்திற்கு நான் ஏகப்பட்ட கடிதங்களைப் போட்டிருக்கிறேன்..." என்றான் ஆனந்த்.

"பாவம்! அந்தக் குடும்பம்! இனவெறியினாலை சீரழிஞ்சு போயிடுச்சு... அந்தப் பெண் இயக்கத்திலை சேர்ந்திருக்கிறாளா? இத்தனை நாள் எனக்கு அது தெரியாமலல்லவா இருந்தது?... அந்தப் பொடியன் அருளம்பலத்தை எனக்

குத் தெரியும்... பாவம்!" என்றார் அருணாசலம்.

பொன்னம்பலமும் அருணாசலமும் ஆனந்தைப் பாதுகாப்பது பற்றிப் பேசினார்கள். "ஆர்மி அடிக்கடி வீட்டிலை நுழைந்து சோதனை போடுது... இங்கை போராளிகளின் பிடி அதிகமாயிருப்பதால் அவ்வளவு தொந்தரவு இல்லை. இருந்தாலும் எச்சரிக்கையாய் இருக்கவேணும்.... பக்கத்திலை எனது சிங்கள நண்பர் சிறில் இருக்கிறார்..... ஏதாவது ஆபத்தெண்டால் அவர் வீட்டிற்கு நீர் சென்று பதுங்கிக் கொள்ளலாம்..."

அன்று மாலை வெளிச்சம் குறைந்தபின் அருணாசலம் விநோதினியின் வீட்டை நோக்கிச் சென்றார். நீண்ட நேரம் அவர் வெளிவரவில்லை.

ஆனந்த் துடிக்கும் இதயத்துடன் காத்திருந்தான். அப்போது அருணாசலத்தின் மகன் கதிரேசன் பரபரப்பாக உள்ளே வந்தான்.

"பாதுகாப்புப் படை டிரக்குகள் உள்ளை வந்துக்கிட்டிருக்கு. பொடியன்களைப் பிடிக்க சோதனை போடறாங்களாம்..." என்று ஆனந்தின் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு வீட்டின் பின்புறமாக ஓடினான். கூடவே பொன்னம்பலமும் ஓடிவந்தார்.

அடுத்த வீட்டுப் பின்புறத்தில் ஒரு பெண் தண்ணீர் இறைத்துக்கொண்டிருந்தாள். சிங்களத்தில் என்னமோ கேட்டாள். கதிரேசனும் சிங்களத்தில் பரபரப்பாக பதில் சொல்ல எல்லோரும் உள்ளே அழைக்கப்பட்டார்கள். ஒரு வயதான மனிதர், "சீக்கிரம் உள்ளை பதுங்குங்கள்" என்றார். அவரும் சிங்களர் தான்.

ஸ்டோர் ரூம் போன்ற ஒரு அறையில் பதுங்கிக்கொண்டார்கள். கதவு மூடப்பட்டது.

"இவர் பெயர் சிறில் ஃபெர்ணாண்டோ! இவரும் ரீச்சர்தான், ரொம்ப நல்ல மனிதர்" என்றான் கதிரேசன்.

"எதற்காக இப்பிடிப் பயப்படுகிறீர்கள்? அப்பிடி என்ன செய்துவிடுவார்கள்?" என்றான் ஆனந்த்.

"உங்களுக்குத் தெரியாது. பி.டி.ஏ.என்னு ஒரு ஆக்ட் இருக்குது. பொடியன்களை வாரண்ற் ஏதுமின்றி பிடித்துப்போகலாமெண்டு. 'பூசா கேம்ப்'பிற்குக் கொண்டு செல்வார்கள். போனால் திரும்பி வருவது நிச்சயமில்லை..." என்றான் கதிரேசன்.

வெளியே பெரும் சத்தம் கேட்டது. கூக்குரல்கள் ஒலித்தன. குழப்பமான, சத்தமான சிங்களக் குரல்கள். ஆனந்தின் தோளிலிருந்த கதிரேசனின் கை நடுங்கியது ஆனந்திற்குத் தெரிந்தது. ஆதரவாக அதைப் பற்றினான்.

வெளியே சிறில் ஃபெர்ணாண்டோ யாருடனோ சிங்களத்தில் சத்தமாகப் பேசியது காதில் விழுந்தது. திடீரென்று குண்டுச் சத்தம் கேட்டது. குரல்கள் சத்தமாக ஒலித்தன.

"அடோ! தமிழ்ப் பொடியன்கள்!"

ஆனந்தின் காதில், "புலிகள் வந்திருக்காங்கள். றோட்டிலேயே கரைச்சல் நடக்கும்...." என்றான் கதிரேசன்.

டப்டப்பென்ற ஓசைகள், குண்டுச் சத்தங்கள்.

சில நிமிடங்களில் எல்லாம் அமைதியாகின.

---

**ஹஹ**

"அடிக்கடி மானேஜர் ஏன் ஆபீஸ் மொட்டை மாடிக்கு போயிட்டு வரார்?"

"விடிகாலையே அவரோட சம்சாரம் மொட்டை மாடில வத்தல் வடாம் பிழிஞ்சிட்டு போயிருக்காங்க. இவர் போய் அப்பப்ப காவல் காத்துட்டு வரார்!"

—வெ.சீதாராமன்.

---

சற்றுநேரம் பொறுத்து சிறில் கதவைத் திறந்தார். கதிரேசனை அணைத்துக்கொண்டார். "நல்ல வேளை! அவர்கள் வீட்டைச் சோதனை போடவேண்டுமெண்டு கேட்கும் வேளையிலை றோட்டில் பொடியன்களின் ஜீப் வந்துவிட்டது..." என்றார்.

ஆனந்த் பிரமித்துப் போய் ஜன்னல்வழியே பார்த்தான். ஒரு நீல நிற ஜீப் நின்றிருந்தது. முன்னால் கொடி படபடத்தது. குண்டடிபட்ட இரண்டு இளைஞர்களை ஜீப்பிற்குள் ஏற்றிக்கொண்டிருந்தார்கள் சில வாலிபர்கள்.

"ஆர்மி டிரக் எங்கே?" என்றான். வீதியில் மனித நடமாட்டமே இல்லை.



"போய்விட்டார்கள்! பொடியன்களைக் கண்டாலே அவர்களுக்குப் பயம்" என்றார் பொன்னம்பலம்.

ஆனந்த் சிறிலின் கைகளைப் பற்றி "மிகவும் நன்றி" என்றான். சிறில் வறட்சியாகச் சிரித்து, "எங்கடை நாட்டிலை சகோதரத்துவமே செத்துவிட்டது" என்றார்.

சிறிது நேரம் கடந்தபின் அருணாசலம் வந்தார். கதிரேசனைப் பாசமுடன் அணைத்துக்கொண்டார். "கதிர்! உமக்கு ஒண்டுமில்லையே?"

ஆனந்த் பொறுமையின்றி, "ஸார்! அங்கே விநோ இருக்கிறாளா?" என்றான்.

"உள்ளே போய்ப் பாருங்கள்" என்று ஒரு அறையைக் காட்டினார். ஆனந்த் அவசரமாக உள்ளே போனான்.

அமர்ந்திருந்த அவள் உடனே எழுந்தாள்.

ஆனந்த் ஒரு நிமிடம் அயர்ந்தான். அந்தப் பெண் விநோவைப் போலவே இருந்தாள். ஆனால் சிறிய உருவம். பாவாடையும், நீளச் சட்டையும் அணிந்து... விநோவின் தங்கை!

"வணக்கம் ஸேர். நான்தான் விஜயகுமாரி. விநோவின் தங்கை!" என்றாள் அவள். அவள் கண்களில் கண்ணீர் மின்னியது.

ஆனந்த் பதில் வணக்கம் சொன்னான். அவன் நெஞ்சம் ஏனோ பதறியது.

"என்னை... என்னைத் தெரியுமா? நான்தான்..."

"தெரியும். அக்கா சொல்லியிருக்கிறாள். அருணாசல மாமாவும் சொன்னார்..." என்றாள் அவள்.

அருணாசலம் உள்ளே வந்து, "நீங்கள் கதைத்துக்கொண்டிருங்கள். எனக்கு வெளியாலை கொஞ்சம் வேலை இருக்குது..." என்று விடைபெற்றார்.

ஆனந்த் அமர்ந்துகொண்டான். "உட்கார் விஜயா!" என்றான். அவள் அமர்ந்தாள்.

"விநோ எங்கேயிருக்கிறாள் இப்போது?" என்றான் ஆனந்த்.

"வவுனியாவில். அவளைக் கண்டு பத்து திகதிகளுக்கு மேல் இருக்கும்" என்றாள் விஜயா. அவளைக் காண மிகவும் பாவமாக இருந்தது.

"நீ படிக்கிறாயா?"

"இல்லை. ஷொப்பிங் சென்டரில் வேலை செய்கிறன். ஐயாவை கவனித்துக்கொள்கிறன்... ஸேர்! நீங்கள் இங்கை வந்தது ஆச்சர்யமாயிருக்குது... நீங்கள் அனுப்பிய கடிதங்களைப் படித்து விநோ கனநேரம் அழுவாள். ஆனால் அவளாலை இயக்கத்தை விட்டு வரமுடியாலை... ஸேர்! ஒண்டு சொல்லட்டுமா?" என்றாள் விஜயா.

"சொல்லு விஜயா!"

"ஸேர்! எண்டை ஐயாவையும் என்னையும் தமிழ்நாட்டிற்குக் கூட்டிப் போவீங்களா? இங்கடை வாழ்க்கை ரொம்பக் கஷ்டமாயிருக்குது... காடையர்கள் எந்த நேரத்திலை வருவாங்களோ எண்டு..." விஜயா விசும்பினாள்.

"அதற்குத்தான் நான் வந்திருக்கிறேன் விஜயா! அழாதே! விநோவையும் கூட்டிக்கொண்டு போய்விடலாம். அழாதே!" என்றான் ஆனந்த்.

"ஸேர்! விநோவிற்கு உங்கள் மேல் பிரியம் அதிகம். வீட்டிற்கு வரும் நேரத்திலையெல்லாம் உங்களைப் பற்றியே கதைப்பாள்..."

"விநோ மறுபடி எப்போ வருவாள்?" ஆனந்திற்கு தொண்டையை அடைத்தது.

"அதைச் சொல்ல முடியாது. எப்போது வேண்டுமானாலும் வருவாள். ஓரிருநாள் தங்கிவிட்டுப் புறப்பட்டு விடுவாள்..."

"விஜயா! நீதான் எனக்கு உதவி செய்யவேண்டும்."

"நிச்சயம் ஸேர்! எமக்கு நிம்மதியான சீவிதம் வேண்டும். அக்காவை நான் எப்பிடியாவது சம்மதிக்க வைக்கிறன்..." என்றாள்.

"அவள் வந்த உடனேயே நான் வந்திருப்பதாகச் சொல்லிவிடாதே. முதலில் நான் அவளைப் பார்க்க வேண்டும்..."

"புரிகிறது ஸேர்... ஐயாவும் உங்களைப் பார்க்க வேணுமாம்..." என்றாள் விஜயா.

"நிச்சயம் சந்திக்கிறேன், நாளைக்கு!" என்றான் ஆனந்த்.

விநோதினியின் அப்பாவை மறுநாள் காலை சென்று சந்திக்க முடியவில்லை. விஜயா அவரை மருத்துவமனைக்கு அழைத்துச் சென்றிருந்தாள். ஆனந்த் அவர்கள் திரும்பி வரும்வரை காத்திருந்தான்.

இரவு வந்ததும் அவர்கள் வீட்டை அடைந்தான்.

விஜயா வரவேற்றாள்.

**"என்னங்க இந்த கல்யாணத்திலே பெண் பெயருக்கு எழுதற மொய் பணத்தை மாப்பிள்ளை வீட்டுக்காரங்களே வாங்கிக்கறாங்க..."**

**"பெண் வீட்டுக்காரங்க மாப்பிள்ளைக்கு கொஞ்சம் வரதட்சிணை பாக்கி வைச்சிட்டாங்களாம். அதான் இந்த ஏற்பாடு!"**

**—எஸ்.ராகவேந்திரா**



அப்பா கட்டிலில் படுத்திருந்தார். உடலின் பலவீனம் வயதைக் கூட்டியிருந்தது.

வீடு சிறியதாக இருந்தது. ஒரே ஒரு தனியறை. சிறிய சமையலறை.

அவர் ஆனந்தைப் பார்த்து கை கூப்பினார். கண்ணீர் விட்டார். கைகளைப் பற்றிக்கொண்டார்.

"தம்பி! எங்கடைக் குடும்பத்தை நீதான் காப்பாற்றவேண்டும். நன்றாயிருந்த எங்கடை வீடு சிதறிப் போச்சு... விநோ இயக்கத்திலை சேர்ந்துவிட்டாள்... எந்த நேரத்திலை அவள் இறப்பாளோ என்ற அச்சம் என்னைக் கொல்லுது... விஜயா பாவம்! ஒன்றுமறியாப் பிள்ளை. விநோ உணர்ச்சி வேகத்திலை இருக்கிறாள்..."

ஆனந்த் அவரைத் தேற்றினான். அவர் குரல் தடுமாறியது.

"உங்களைப் பற்றி விநோ நிறைய சொல்லியிருக்கிறாள். பாவம் அந்தப் பெட்டை... இருதலைக் கொள்ளி எறும்புபோல்..."

ஆனந்த் சுவரில் மாட்டியிருந்த விநோவின் ஃபோட்டோவைப் பார்த்தான்.

விஜயா தேநீர் தயாரித்து எடுத்து வந்தாள்.

குடிக்கும்போது வாசலில் அந்த சத்தம் கேட்டது. ஏதோ வாகனம்



வந்து நிற்கும் சப்தம்.

"விநோ!" என்றாள் விஜயா.

ஆனந்த் எழுந்தான். இதயம் துடித்தது. சட்டென்று விலகி அடுத்த அறையில் நுழைந்தான். மறைந்து கொண்டான். விஜயாவிடம், சொல்லாதே என்பதுபோல் சைகை செய்தான்.

அந்த அறையில் சிறிய ஜன்னல் இருந்தது. அதன் வழியே பார்த்தான். காட்சி தெரிந்தது.

வெளியே ஒரு நீலநிற ஜீப் நின்றிருந்தது. முன்னால் கொடி பறந்தது.

ஆனந்த் பிரமித்தபடி பார்த்தான்.

விநோதினி அதனுள்ளேயிருந்து குதித்து இறங்கினாள். அதே பழைய உடை. கம்பீரமான என் விநோ! ஆனந்தின் கண்கள் கலங்கியது. ஜீப் உடனே கிளம்பி, விரைந்து மறைந்தது.

விநோ உறுதியாக நடந்து வந்தாள். வீட்டினுள் நுழைந்தாள்.

ஆனந்திற்கு வெறும் குரல் மட்டுமே கேட்டது.

"விஜயா! நல்லாயிருக்கிறியா? அப்பாவிற்கு உடம்பு எப்படியிருக்குது? சபாவிடம் பணம் அனுப்பியிருந்தேனே? வாங்கிக் கொண்டாயா?..."

ஏனோ அமைதி நிலவியது.

மறுபடி விநோவின் குரல் ஒலித்தது.

"விஜயா, வீட்டிலை யாரு இருக்காங்கள்? வாசலிலை புது செருப்பு கிடக்குது?" கண்டுபிடித்து விட்டாள்.

இப்போது விஜயா சொன்னாள். "விநோ! உள் அறையில் போய்ப் பார்! ஒரு விருந்தாளி!"

விநோ உள்ளே நுழைந்து, அமர்ந்திருந்த ஆனந்தைப் பார்த்தாள். ஒருகணம் அவளுக்கு எதுவும் புரியவில்லை. அதிர்ச்சி முகத்தில் பூத்தது. பிரமித்தாள்.

ஆனந்த் கூர்மையாக அவளையே பார்த்தான். எதுவும் பேசவில்லை.

"ஆனந்த்! நீங்களா? இங்கை எதுக்கு வந்தீர்?" என்றாள். அவள் அனுமதியின்றி அவள் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தது.

ஆனந்த் எழுந்தான். "உனக்காகத்தான் விநோ!" என்றான்.

"என்னால்.... என்னால்... நம்ப முடியாலை... எப்பிடி வந்தீர்? என்னைப் பார்க்கவா? இந்த நிலைமையிலா? எப்பிடி வந்தீர்?..."

"எப்படியோ? விநோ! என்னை ஞாபகம் இருக்கிறதா?"

"ஆனந்த்! என்னைக் கேள்வி கேக்கிறீங்கள்?"

"விநோ! உன்னுடைய லெட்டரைப் படித்தேன். எல்லாம் உண்மையா விநோ?"

"ஐயோ! நிலைமை புரியாமல் வந்திருக்கீங்களே? பாதுகாப்பு அமைச்சில் புது ஓடர் போட்டிருக்காங்கள். கொம்ப்ளீட் சர்ச்...இன்னும் சில நாளிலை ஆர்மி இங்கை வந்துவிடும்..."

"இங்கே சண்டை எப்போதுமே ஓயப்போவதில்லை.... விநோ! நீ என்னுடன் வரவேண்டும்.... நீ மட்டுமில்லை. உன் அப்பா, விஜயா... எல்லோரும்... அதற்குத்தான் நான் வந்திருக்கேன்!"

"ஆனந்த்! உமக்கென்ன பைத்தியமா?"

"எப்பிடி வேணுமானாலும் நினைத்துக்கொள்!"

(அடுத்த இதழில் முடியும்.)

விநோ ஆனந்தை அழைத்துக் கொண்டு மாடிக்குச் சென்றாள். முழு நிலவின் ஒளி காய்ந்து கொண்டிருந்தது. அருகாமை மரங்களிடையே புகுந்து காற்று அசைந்தது.

"ஆனந்த்! லெட்டரில் எல்லாம் எழுதியிருந்தேனே? புரியவில்லையா?" விநோ ஆனந்தின் கைளைப் பற்றிக் கொண்டாள்.

"மிஸ்லீட் பண்ணியிருக்காங்க விநோ! இந்தச் சண்டைக்கு முடிவே கிடையாது... வெறும் மரண விரயம். இதில் நுழைந்து உன் வாழ்க்கையை நாசமாக்கிக்காதே!...."

"ஆனந்த்! உமக்குப் புரியாதலை! விமன் கமாண்டர் பதவி எனக்கு கிடைக்கப் போகுது... எண்டை இயக்கம் நாளுக்கு நாள் வலுப் பெற்று வருகுது..."

"நீ ஒருத்தி குறைந்தால் உன் இயக்கம் ஒன்றும் செத்து விடாது..."

"ஐயோ! எப்பிடிப் புரியவைப்பேன்..."

"விநோ! உன் இலட்சியம், வேகம் எல்லாம் எனக்குப் புரியுது... ஆனால் உன்னை... உன்னை என்னால் மறக்க முடியாது விநோ!... நீ எனக்கு வேண்டும்... உனக்காக அலைந்து, திரிந்து, நடுக்கடலில் பயணித்து... விநோ! என் துடிப்பு உனக்குப் புரியவில்லையா?... இல்லை, புரியாததுபோல்..."

விநோ அவன் கைகளில் புதைந்து அழுதாள்.

"ஆனந்த்.... என்னைப் பார்க்கவா... என்னைப் பார்க்கவா... இவ்வளவு தூரம் வந்தீங்கள்...."

"ஆமாம் விநோ... ஆமாம்... வா விநோ' வந்துவிடு!"

"இ ல, என்னாலை வரமுடியாது.. ஆனந்த் ப்ளீஸ்... சீக்கிரம் போய்விடுங்கள்... நிலமை மோசமாவதற்குள்... நான் ஏற்பாடு செய்கிறன்..."

"நீ இல்லாமல் போகவே மாட்டேன்.." என்றான் ஆனந்த் உறுதியாக.

"அக்கா!" என்று குரல் கேட்டது. விஜயா நின்றிருந்தாள்.

"விநோ! எதுக்காக அழுகிறாய் அக்கா? உனக்கு உன் இலட்சியம் பெரிசென்றால் எதற்கு அழுகிறாய்? போ! துப்பாக்கி எடுத்து சுட்டுத் தள்ளு!... உனக்காக இவ்வளவு தூரம் இவர் வந்திருக்கிறாரே, அந்த அன்பெல்லாம் உனக்குத் தேவையில்லை... அமைதியான வாழ்க்கை உனக்குத் தேவையில்லை... அப்பாவிற்கும் எனக்கும் நிம்மதியான சீவிதம் இவரால் கிடைக்குமென்றாலும் தேவையில்லை..."

"விஜயா! என்ன கதைக்கிறாய்?"

"பின் என்ன? இவரைப்பற்றிக் கதைத்து எத்தனை முறை என்னிடம் அழுதிருக்கிறாய்? உங்களிடை இயக்கத்திலை இலட்சிய வேகம் குறைந்து வருகுதெண்டு எவ்வளவெல்லாம் வருத்தப்பட்டிருக்கிறாய்? அக்கா! சிங்களக் கண்டயர்களை மட்டும் நீ கொல்ல வேண்டியதில்லை... பங்காளிப் போராளிகள் இருக்கிறாங்களே... அவங்களையும் சுட்டுத் தள்ளு... அதைத்தானே உங்கடை இயக்கம் செய்ய ஆரம்பித்திருக்கிறது?... எனக்கும் நிலவரம் தெரியுமக்கா!... போன வாரத்தில் ஒரு பொடியன் நமது வீட்டிலை ஒரு பொக்கெட் ஹெராயினை கொடுத்து விட்டுப் போனான். பிறகு பெற்றுக் கொள்கிறானாம்... எதற்கு அக்கா இந்த வேலையெல்லாம்?..."

"விஜயா! நீ அறியாப்பிள்ளை! உனக்குப் புரியாது!"

"உன்னைவிட அவளுக்கு நல்லாவே புரியுது... விநோ! நீ முட்டாள்தனமான 'இல்யூஷனில்' இருக்கிறாய்... யு ஹாவ் பீன் பிரெய்ன் வாஷ்ட்..." என்றான் ஆனந்த்.

"இல்லை.. எங்கடை பிரச்னைகளெல்லாம் உனக்குப் புரியாது!"

"வாழ்வதற்குத்தான் போராட்டமே தவிர, சாவதற்கு அல்ல... விநோ! உன் தங்கையையும், அப்பாவையும் அம்போவென்று விட்டுவிட்டுப் போய்விடுகிறாய்.. அவர்களுக்கு ஏதேனும் ஆகிவிட்டால்..."

விஜயா அழுதாள்.

விநோ தலையைப் பிடித்துக் கொண்டாள்.

"எனக்கு என்ன செய்வதெண்டே தெரியாலை..."

"எதையும் யோசிக்காதே விநோ! தமிழ்நாட்டில் அமைதியான வாழ்க்கை காத்திருக்கிறது..."

"அது எங்கடை இயக்கத்திற்கு நான் செய்யும் துரோகம்..."



"உங்க பையன் படிச்சிட்டு வேலை இல்லாம கிராமத்திலேயே ஏற்றம் இறைச்சிட்டுக்கிட்டு இருந்தானே, இப்ப பட்டணத்திலே என்ன வேலை செய்யறான்?"

"லிப்ட் ஆபரேட்டரா வேலை பார்க்கறாங்க."

—எஸ். ராகவேந்திரா

"நீ எனக்கு செய்வதற்கு வேறு என்ன பெயர்?... ஷுக்!"

ஆனந்த் விநோவின் தோளை இறுகப்பற்றினான்.

"விநோ! உண்மையைச் சொல்! என்னை நீ விரும்பவில்லையா?"

விநோ! தலையைக் குனிந்து கொண்டு விம்மினாள்.

அவர்களிடையே நீண்டநேரம் விவாதம் நடைபெற்றது. விநோ அங்கேயும், இங்கேயும் ஊசலாடினாள். அவளைத் தேடி ஈழத்திற்கே வந்துவிட்ட ஆனந்தின் தீவிரம் அவளை அழவைத்தது. அமைதியான, நிம்மதியான வாழ்க்கையை அவள் மனம் ஏங்கியது. வன்முறையும், நிச்சயமற்ற எதிர்காலமும் கொண்ட வாழ்க்கை அவளுக்கு வெறுப்பை அளித்திருந்தது.

கடைசியில் விநோ ஆனந்துடன் தமிழ்நாட்டிற்கு வர ஒப்புக்கொண்டாள்.

"ஆனந்த்! நீங்கள் ஜெயித்து விட்டீர்கள். ஆனால் எங்கடை இயக்கத்திலிருந்து பிரிவது கடினமான வேலை... ஆட்கள் கண்காணித்தபடி இருப்பார்கள்.... உடனடியாக நாம் எல்லோரும் இங்கிருந்து கிளம்பினால் கண்டுபிடித்து விடுவார்கள். நாளை நான் வவுனியா போக வேண்டும்... என் அப்பாவிற்கு உடல் நிலை சரியாயில்லையெண்டு சொல்லி மறுபடி வருகிறன்... ஓரிரு நாட்களில்! இந்தியா செல்ல ஏற்பாடுகளையெல்லாம் தயாராக செய்து விடுங்கள்..."

"விநோ! நிச்சயம் வரவேண்டும்!"

"சே! இதிலும் சந்தேகமா?"

"உன்னைப் பற்றித் தெரியும்... அதனால்தான்...

விநோ சிரித்தாள். ஆனந்தும் ரொம்ப நாள் கழித்து சிரித்தான். அன்றிரவு விநோவிற்கும், ஆனந்திற்கும் இனிமையாகக் கழிந்தது!

மறுநாள் அதிகாலை விநோவை அழைத்துச் செல்ல ஜீப் வந்தது. விநோ கிளம்பினாள்.



"எனக்கு பிரஷ்ஷர் ஜாஸ்தி இருககாம். அதனாலே டாக்டர் வாயை கட்டுபடுத்தச் சொல்றாரு."

"சாப்பாட்டையா இல்லே மருமகளோட போடற சண்டையையா?"

—எஸ். ராகவேந்திரா

நாட்கள் கடந்தன. விநோ வரவில்லை.

வரவேயில்லை.

அருணாசலம் ஆனந்தைத் தேற்றினார்.

"ஆனந்த்! விநோ வராததற்குக் காரணம் இருக்கும். வவுனியாவில் பாதுகாப்புப் படை புகுந்திருக்கு. 'ஃபியர்ஸ் ஃபைட்டிங்' என்று செய்தியில் சொன்னார்கள். நகரைச் சுற்றி 'பிளாக்கேட்' செய்திருக்கிறார்கள்.. போராளிகளுக்கும் ஆர்மிக்கும் சண்டை நடக்குது. அதான் காரணமாயிருக்கும்..."

மதியம் செய்தி கேட்டார்கள்.

"வவுனியா பகுதியில் அரசாங்கப் படைகளுக்கும் தமிழ் பயங்கரவாதிகளுக்குமிடையேயான துப்பாக்கிச் சண்டையில் முப்பதுக்கும் மேலான பயங்கர வாதிகள் கொல்லப்பட்டார்கள். அவர்களில் மூன்று பெண் தீவிர வாதிகளும் அடக்கம்... அப்பகுதியில் நிலைமை கட்டுக் கடங்கியிருப்பதாக..."

"நோ!" என்றான் ஆனந்த். அவன் முகம் வெளிறிப் போயிருந்தது. "விநோவிற்கு ஒன்றும் ஆகியிருக்காது..."

கதிரேசன் வந்து சொன்னான்.

"விநோ வீட்டு வாசலிலை அவ ளிடை இயக்கத்தின் ஜீப் நிற்குது."

ஆனந்த் ஓடிவந்து பார்த்தான். சட்டென்று மறைந்து கொண்டான்.

ஜீப்பில் சாய்ந்தபடி விஜயன் நின்றிருந்தான். அவன் தோளில் எல்.எம்.ஜி. துப்பாக்கி இருந்தது.

இன்னும் இரண்டு இளைஞர்கள் இறங்கினார்கள்.

ஒருவன் கையில் பெரிய பார்சல் போல் ஏதோ வைத்திருந்தான். அவர்கள் விநோவின் வீட்டினுள் நுழைந்தார்கள்.

அடுத்த சில நிமிடங்களில் வீட்டினுள்ளிருந்து பெரிய அழுகைச் சத்தம் கேட்டது. விஜயாவின் அழுகைச் சத்தம்.

ஆனந்தின் உடல் நடுங்கியது. மரம் போல் நின்றிருந்தான்.

சில நிமிடங்களில் ஜீப் மறுபடி கிளம்பியது. புழுதியை இறைத்தபடி சென்று மறைந்தது.

ஆனந்த் ஓடினான். வீட்டினுள் நுழைந்தான், ஸ்தம்பித்தான்.

விஜயா தலையை விரித்தபடி அழுதுகொண்டிருந்தாள். அப்பா வாயில் துண்டை அடைத்தபடி விக்கிக் கொண்டிருந்தார்.

"விஜயா!... என்ன? என்ன... ஆச்சும்மா?"

விஜயா ஆனந்தின் மேல் விழுந்து அழுதாள்.

"ஸேர்!... அக்கா.. விநோ அக்கா செத்துப் போயிட்டா!"

"என்னது!"

ஆனந்த் பார்த்தான்.

பார்சல் பிரிக்கப்பட்டிருந்தது. அதனுள்ளே ஒரு மிலிட்டரி யூனிஃபார்ம் இருந்தது. அதன்மேல் ரத்தம் தோய்ந்திருந்தது.

விநோவின் ரத்தம்!

அதில் பேட்ஜ் இருந்தது. அதில் இரண்டு கொடிகளும், தமிழில் இயக்கத்தின் பெயரும் பொறித்திருந்தது.

"ஸேர்! வவுனியாவில், துப்பாக்கிச் சண்டையில் அக்கா செத்துப் போயிட்டாளாம்... அக்கா!... விநோ அக்கா!" விஜயா கதறினாள்.

நடுங்கும் விரல்களால் விநோவின் உடையைத் தொட்டுப் பார்த்தான். ரத்தத்தைத் தொட்டுப் பார்த்தான்.

அவ்வளவுதான்! எல்லாம் முடிந்தது.

வானுக்கும், பூமிக்குமிடையே தடுமாறிய பறவை இறந்துவிட்டது. ஒரு அழகான தங்க மீன் வெப்பத்தின் சூட்டில் மறைந்துவிட்டது.

விநோ! இத்தனை நாள் போராட்டம், ஏமாற்றம், பயணம், ஆச்சர்யம், எல்லாவற்றிற்கும் பின்னால் நீ போய்விட்டாய்!

விநோ! நீ போய்விட்டாய்!

இனி என் வாழ்க்கையில் ஒன்றுமில்லை.

அருணாசலம் ஆனந்தைத் தேற்ற முடியாமல் திணறினார். அவனுடைய அதிர்ச்சி எத்தனை பெரியது என்பது அவருக்குத் தெரிந்தது. இந்த அருமையான இளைஞனின் அத்தனை முயற்சிகளும் தோற்றுப் போயின. மனிதர்களுக்கிடையேயான வெறியாட்டத்தில் இரண்டு இளம் உள்ளங்களின் வாழ்க்கை வீணாய்ப் போனது...

விஜயகுமாரி ஆனந்தின் அழைப்பை மறுத்தாள். "எல்லாம் போன பின்னால் எனக்கு மட்டிலும் அமைதி வேண்டாம்..."

வாழ்க்கையின் எல்லா சக்தியையும் உறிஞ்சி எடுக்கப்பட்டவனாக ஆனந்த் சோர்வுடன் காங்கேசன் துறையை அடைந்தான். படகு காத்திருந்தது.

தனிமையில் வந்த பயணம். தனிமையிலேயே தொடர்ந்தது.

ரஞ்சனி எதுவும் பேசவில்லை. பேச முடியவில்லை. பிரமித்திருந்தாள்.

ஆனந்த் கண்களை மூடியபடி சாய்ந்திருந்தான். அவன் கண்களில் கண்ணீர் வழிந்ததைப் பார்த்தாள்.

"ஆனந்த்!..." அழைத்தாள்.

ஆனந்த் பேசவில்லை. பழைய நினைவுகளில் அவன் புதைந்துவிட்டது தெரிந்தது. புரிந்தது.

ரஞ்சனி அவனை எதுவும் கேட்கவில்லை. போர்வையைப் போர்த்தி விட்டாள். தானும் படுத்துக்கொண்டாள்.

இரவு தன் ஆட்சியைத் துவக்கியது. அருகே தொட்டிலில் விநோதினி நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தாள்.

**ஒரு சம்பவம்**
**இடம்.– நிலவேலி, இலங்கை**
**காலம்.– சில வருடங்கள் முன்னால்**

விஜயகுமாரி அந்தக் கடிதத்தை எழுத ஆரம்பித்தாள்.

"அன்புள்ள ஆனந்த் ஸேருக்கு.

---



"பலான மலையாளப் படம் எடுத்த சினிமா கம்பெனியிலே திருடினது தப்பா போச்சு...."

"ஏன், ஒன்னும் கிடைக்கலையா?"

"வயிற்றெரிச்சலை கிளப்பாதே. வெறும் ஜட்டியும், பிராவும்தான் கிடைச்சது."



## "காமனும் கவந்தனும்"

"மணிக்கொடி" என்ற அந்தக் காலத் தமிழ்ப் பத்திரிகையின் ஆசிரியராக இருந்தவர் அமரர் பி.எஸ். ராமையா. இவரும் அவரது நண்பர் புதுமைப் பித்தனாகிய விருத்தாசலமும் சென்னையில், 1936-ஆம் ஆண்டு ஒரு தெருவில் பேசிக்கொண்டே சென்றனர். அப்பொழுது வெளிச்சம் மங்கி இருள் சூழ்ந்த நேரம். ஒரு தெரு விளக்கினடியில் ஒரு இளம்பெண் 'பலான' வியாபாரத்தில் பேரம் பேசிக்கொண்டிருந்தாள், மற்றொரு ஆடவனுடன். இதனைப் பார்த்த இருவரும் அந்தச் சம்பவத்தை வைத்து ஒரு சிறுகதை எழுதுவதென முடிவு செய்தனர். முதலில் புதுமைப்பித்தன் கதை எழுதினார். அந்தக் கதைதான், "காமனும் கவந்தனும்" என்ற தலைப்பில் மணிக்கொடியில் வெளிவந்தது.

—எம்.என்.பி.



விஜயா அன்பு வணக்கம். தங்களுக்கு இந்தக் கடிதம் எழுத வேண்டிய நிலைக்கு வந்திருக்கிறேன். மனசாட்சியின் தொல்லை பொறுக்காமல்..... ஒரு உண்மையைச் சொல்கிறேன்...

விநோ உயிருடன் இருக்கிறாள்.

ஆம். அன்று உடை அனுப்பி வைத்து நம்மையெல்லாம் அவள் இறந்துவிட்டதாக நம்பச்செய்தது அவளுடைய திட்டம். உண்மையல்ல.

நீங்கள் இங்கிருந்து சென்றுவிட்ட ஒரு சில தினங்களில் விநோ வீட்டிற்கு வந்தாள். எங்களுக்கு அதிர்ச்சி!

ஸேர்! உங்களுடைய பிடிவாதத்தை சமாளிக்கவே அப்படிச் செய்தாளாம். அவளில்லாமல் நீங்கள் திரும்ப வேண்டுமெண்டால் அதற்கு ஒரே வழி இதுதானாம்...

அவள் இயக்கத்திலை விமன் கமாண்டராக உயர்ந்திருக்கிறாள்.

இயக்கத்திலிருந்து அவளைப் பிரிக்க முடியாதென்பது மட்டும் மறுக்க முடியாத உண்மை. (இந்தக் கடிதம் எழுதுவது அவளுக்குத் தெரியாது)

ஆனால் ஆனந்த் ஸேர்! அவள் ஷேர்ட் பொக்கெட்டில் உங்கள் புகைப்படம் இருக்கிறதைப் பார்த்தேன்.

ஆனந்த் ஸேர், தயவுசெய்து இந்தக் கடிதத்தைப் படித்துவிட்டு மறுபடி வரவேண்டாம். விநோ உயிரோடைதான் இருக்கிறாள் என்பதைத் தெரிவிக்கவே இந்தக் கடிதம். விநோ இதை விரும்பமாட்டாள் என்பதும் எனக்குத் தெரிகிறது.

எல்லாவற்றையும் மறந்துவிடுங்கள்.

தங்கள் அன்பான,
விஜயகுமாரி

கதையின் ஆரம்பத்தில் சொல்லியிருக்கும் ஒரு சம்பவத்தை மறுபடி படிக்குமாறு கேட்கப்படுகிறார்கள்.

—முற்றும்.